REGD. NO. M. 6311 ★ தனி இதழ் 1 அணு ★ இலங்கையில் 10 சதம் ★ PHONE: 55630

# நம் நாடு

தி.மு.க. தின இதழ் ஆசிரியர் இரா. நெடுஞ்செழியன்

The "Nam Nadu" A Tamil Daily. ★ The Official Organ Of The D.P.F.

மலர் 4] சென்னை: கார்த்திகை 12உ செவ்வாய் (27—11—56) ★ ★ வெளியூர்: கார்த்திகை 13உ புதன் (28—11—56) [இதழ் 145

## எண்ணெய்க் கப்பல்கள் அணுசக்தியால் இயங்கும்?

★

கடல் மார்க்கங்களில் மிகவும் வேகமாய்ச் செல்லும் பெரிய எண்ணெய்க் கப்பல்களை சிக்கனமாக இயக்குவதில் சுமார் ஐந்து ஆண்டுகளில் பழைய எரி பொருள்களோடு அணுசக்தி போட்டியிடக்கூடுமாம்!

அணுசக்தியால் இடக்குவதின் நான்கு வித்தியாசமான முறைகள் பற்றிய மாதிரி அமைப்பு குறித்த ஆற ஆராய்ச்சிகளை அமெரிக்க அரசாங்கம் செய்துகொண்டிருக்கிறதாம்!

# உண்மையை விழுங்குகிறார் நிதி மந்திரி!

## காங்கிரசாருக்கு உள்ளமிருந்தால் வெட்கப்படட்டும்

### தூத்துக்குடியில் துவங்கிய தொழில் நடைபெறாதது ஏன்?

### மந்திரிகள் பதில் கூறுவார்களா?

### சென்னையில் அண்ணா முழக்கம்

"தஞ்சைக் கூட்டம் ஒன்றில் பேசும்போது நிதியமைச்சர் சுப்பிரமணியம், 'தொழில் துறையில் தென்னாடு பின்தங்கிக் கிடக்கிறது' என்று குறிப்பிட்டிருக்கிறார். கூட்டத்திலிருந்தவர்கள், மந்திரியே உண்மையை ஒப்புவது கேட்டு, 'கேளுங்கள்! கேளுங்கள்!' என்று குரல் எழுப்பியிருக்கிறார்கள். இந்தக் குரலைக் கேட்ட மந்திரி, உடனே, தான் கக்கியதை திரும்ப வாரி எடுத்து விழுங்கியிருக்கிறார், அதே கூட்டத்தில்!

"'தொழில் துறையில் தென்னாடு பின்தங்கியிருக்கிறதென்று நான் கூறுவதால், நீங்கள், 'கேளுங்கள், கேளுங்கள்' என்று குரல் கொடுக்கிறீர்கள்; இப்போது கேளுங்கள்—தொழில் துறையில் தென்னாடு பின்தங்கியிருக்கிறது என்பதாலேயே, நான் வடநாடு தென்னாடு என்று பிரித்துப் பேசுவதாகக் கருதக் கூடாது' என்று கூறினாராம்!

"உடனே கூட்டத்திலிருந்தவர்கள் 'வெட்கம்! வெட்கம்!' என்று கூவியிருக்கிறார்கள்!

"வாந்தியெடுத்ததைத் திரும்ப விழுங்குபவர்கள் இருக்கமாட்டார்கள். ஆனால், மந்திரி சுப்பிரமணியம், தான் கத்தியதையே திரும்ப விழுங்கும் இரங்கத்தக்க பரிதாப நிலையில் இருக்கிறார்; நாம் அதற்காக மிக வருந்துகிறோம்,"

*—என்று, அண்ணா அவர்கள், கடந்த 24—11—56ம் தேதியன்று, சென்னை மூலக்கொத்தளம் அழகிரி மன்ற ஆண்டுவிழாவில் பேசும் போது குறிப்பிட்டார்.*

#### காமராசர் கூற்று

*தொடர்ந்து பேசுகையில் அண்ணா அவர்கள் குறிப்பிட்டதாவது:—*

*"காமராசர் சமீப காலமாக பேசும்போதெல்லாம், 'தொழில் துறையில் வடநாடு வளர்ந்திருக்கிறது — தென்னாடு வளரவில்லை என்று கூறினால் மட்டும் போதுமா? வடநாட்டு முதலாளிகள், தனிப்பட்டவர்கள் பெரும் தொழில்களைத் துவக்கி வளர்க்கிறார்கள்; இங்குள்ளவர்களும் துவக்கட்டுமே, யார் வேண்டாமென்றார்கள்? அதை விடுத்து, வடநாடு தென்னாடு என்று பேசினால்மட்டும் போதுமா?'; என்று குறிப்பிட்டு வருகிறாராம்!*

*"இதுபோலவே நிதி மந்திரி சுப்பிரமணியமும் கூறுவதாக அறிகிறேன்.*

*'நான் ஒரு சம்பவத்தைக் குறிப்பிட்டுக் கூறுகிறேன்; அவர்கள் என்ன பதில் சொல்கிறார்கள் என்று பார்க்கலாம்.*

#### சென்னை மந்திரிகள் கேட்பார்களா?

*"'தூத்துக்குடியில் உப்பளங்கள் ஏராளம் உண்டு; அங்கு சுண்ணாம்புக் கற்களும் ஏராளமாகக் கிடைக்கின்றன; இந்த வாய்ப்புகளை வைத்துக்கொண்டு, அங்கு சோடா உப்பு தயாரிக்கும் விஞ்ஞானத் தொழிற்சாலை ஒன்றை 1953-ல் துவக்கத் திட்டமிட்டார், ஒரு தென்னாட்டுக்காரர்! அங்கு, குளோரைட், குளோரியம் முதலிய பொருள்களும் உற்பத்தி செய்யத் திட்டமிடப்பட்டது.*

*"இந்தத் தொழிற்சாலைக்குத் தேவையானது ஒரு கோடி ரூபாய் மூலதனம்; இதை, அந்தத் தொழில் துவக்க விரும்பியவர், பல பேரைச் சேர்த்துக் கொண்டு திரட்ட முற்பட்டார்; சென்னை சர்க்காரும் ரூ. 10 இலட்சம் பங்கு வாங்கினார்கள்.*

*"அந்தத் தென்னாட்டுக்காரர், தொழிற்சாலைக்கான வேலைகளை எல்லாம் மும்முரமாகச் செய்தார்; 100 ஏகர் நிலம் வாங்கினார்; பாளையங்கோட்டைக்கும் அத்துக்குடிக்குமிடையே நல்ல பாதை அமைக்க ஏற்பாடு செய்தார்.*

*"தொழிற்சாலைக்கான கட்டிடம், அதிகாரிகளுக்கான பங்களாக்கள், தொழிலாளருக்கான வீடுகள் கட்டினர்.*

*"சுவிட்சர்லாந்திலிருந்து நிபுணர்களை வரவழைத்தார்.*

*"ஆறு இலட்சம் ரூபாய் பெறுமான இயந்திரச் சாதனங்களை இறக்குமதி செய்தார்; சுவிட்சர்லாந்திற்கே ஒருமுறை போய் வந்தார்.*

*"புதிய இரயில்வே நிலையம் திறக்கப்பட்டது; டெலிபோன் வசதிகள் செய்யப்பட்டன.*

*"1953-ல், மைசூர் மகாராஜா தொழிற்சாலையைத் துவக்கியும் வைத்துவிட்டார்.*

*"ஆனால், தொழில் நடக்கவில்லை, இன்று!*

"இத்தனை ஏற்பாடுகளும் பூர்த்தியாகி, தொழிற்சாலை மைசூர் மகாராஜாவால் திறந்து வைக்கப்பட்ட பிறகும், தொழிற்சாலை வேலை செய்யவில்லை; ஏன்? உண்மையான காங்கிரஸ்காரர்கள் பதில் சொல்வார்களா? எண்ணிப் பார்ப்பார்களா?

#### 1955-ல்!

"1955-ல், அதே இடத்தில், அதே போன்றதொரு தொழிற்சாலை துவக்க டெல்லி சர்க்கார், மதுரை டி. வி. எஸ். கம்பெனிக்கு ஒரு அனுமதி வழங்கினார்கள்; 1953-ல் துவக்கப்பட்ட தொழிற்சாலைக்கு அனுமதி இல்லை என்றார்கள்.

*"டி. வி. எஸ். கம்பெனியார், தங்களுக்குக் கிடைத்த அனுமதியை, சௌராஷ்டிரா (வடநாட்டில்)வில் உள்ள ஒரு கம்பெனிக்கு விற்றுவிட்டார்கள்.*

#### அநியாயம்!

"'இந்த அநியாயத்தை, டில்லிக்கும் சென்னைக்கும் முறையிட்டேன்; பலன் இல்லை' என்று, அந்த தூத்துக்குடிக்காரர் கூறியிருக்கிறார்

*"'எதைச் செய்ய வேண்டும்—எதைச் செய்யக்கூடாது என்ற அதிகாரம் டில்லியிடம் இருப்பதால்தான் இந்த அநியாயம் நடைபெற்றிருக்கிறது' என்று, தூத்துக்குடிக்காரர் குமுறியிருக்கிறார்.*

#### பாவாடை நாடாவில் தொங்குகிறார்கள்

*"'சென்னை மந்திரி சபை, இந்த அநியாயம்பற்றி டில்லியைக் கேட்கவில்லை; கேட்க முடியவில்லை. இந்த மாநில சர்க்கார், டில்லியின் பாவாடை நாடாவில்தான் தொங்கிக் கொண்டிருக்கிறது' என்று அவர் உள்ளம் நொந்து கூறியிருக்கிறார்.*

"இந்த மாநிலத்தின் தொழில் அபிவிருத்தியில் அக்கரை கொண்டவர்கள், இதுபோன்ற அநியாயங்களைக் கண்டிக்க வேண்டும். இந்த நாடு தொழில் துறையில் முன்னேறுவதற்கு, இந்த நாட்டிற்குப் பொருளாதாரச் சுதந்திரம் வேண்டும்; இல்லாவிடில், நாடு முன்னேறாது,' என்று அவர் எச்சரித்திருக்கிறார்!

#### வெட்கப்படுங்கள்

*"காங்கிரஸ் நண்பர்களே, குமுறலுக்கு ஆளாகி எச்சரிக்கைவிடுத்திருப்பவர் ஒரு காங்கிரஸ்காரர்; ஒரு எம். எல். ஏ., ஒரு முன்னாள் மந்திரி! உண்மையில் உங்களுக்கு உள்ளம் என்று ஒன்றிருந்தால் வெட்கப்படுங்கள்!*

#### என்ன சொல்லப் போகிறார்கள்?

*"'தென்னாட்டில் உள்ளவர்கள் தொழில் துவக்கட்டுமே!' என்று கூறுகிற காமராசர்களும் சுப்பிரமணியங்களும், இந்தச் சம்பவம் குறித்து என்ன சொல்லப் போகிறார்கள்?"*

## பிரிட்டிஷ் கம்யூனிஸ்டுக் கட்சியில் பிளவு!

### 'டெய்லி ஒர்க்கர்' இதழ் தரும் தகவல்

லண்டன், நவ. 26—

*'டெய்லி ஒர்க்கர்' என்ற இங்கிலாந்து கம்யூனிஸ்டு கட்சிப் பத்திரிகை, பிரிட்டிஷ் கம்யூனிஸ்டு கட்சியில் பெரியதொரு நெருக்கடி ஏற்பட்டிருப்பதாகக் கூறியிருக்கிறது.*

*பிரிட்டிஷ் கம்யூனிஸ்டு கட்சியின் சரித்திரத்தில் இல்லாத வகையில், பெரியதொரு தீவிரமான கருத்து வேறுபாடு, பிளவு இப்போது ஏற்பட்டிருப்பதாகவும் அந்தப் பத்திரிகை கூறியிருக்கிறது.*

## சென்னை நிதி மந்திரியின் நாலாந்தரமான வசைமாரி

### எளம்பிள்ளையில் தி. மு. கழகத்தின்மீது மாசு கற்பிக்க முயற்சி

*எளம்பிள்ளை, நவ. 26—*

*"இந்தியாவை விட்டு மவுண்ட்பாட்டன் பிரபு கப்பலேறும் போது அவருக்கு ஏராளமான தந்திகள் வந்து குவிந்தன; 'எங்களை எல்லாம் விட்டுப் பிரிந்து போகிறீர்களே, நாங்கள் என்ன செய்வோம்?' என்று அவற்றில் பல கூறின. இப்படிப்பட்ட தந்திகளை அனுப்பியவர்கள் யார் என்று பார்க்கும் போது, திராவிட முன்னேற்றக் கழகக்காரர்கள்தான் என்று தெரியவந்தது!*

*"அப்படி வெள்ளையருடைய காலைப் பிடித்து வாழ்ந்தவர்கள்தான் இந்தத் திராவிட முன்னேற்றக் கழகக்காரர்கள்! அவர்கள் பேச்சை நம்பாதீர்கள்!"*

*என்று மிக மட்டரகமான முறையில், சேலம் மாவட்டத்தைச் சேர்ந்த எளம்பிள்ளை என்ற ஊரில் கடந்த 22-ம் தேதியன்று திரு. வி. க. நூல் நிலையத்தைத் திறந்து வைக்கும்போது சென்னை நிதிமந்திரி சி. சுப்ரமணியம் பேசியிருக்கிறார். (ச. - கி.)*

### எல்லைத் தகராறு: சர்க்கார் கொள்கை!

*புதுடில்லி, நவ. 26—*

*"மாநிலங்களுக்கிடையே எல்லைத் தகராறுகளை உடன்பாட்டின் மூலம் தீர்த்துக்கொள்ளவேண்டும். மற்ற எல்லைத் தகராறுகளை மண்டலக் குழு தீர்த்துவைக்கும்; இதுதான் இந்திய அரசாங்கத்தின் கொள்கையாகும்" என்று இந்திய உள்நாட்டு விவகார அமைச்சர் தத்தார் மக்கள் சபையில் கூறினார்.*

### ஆந்திர அமைச்சரவையில் கோபாலர் சேருவாராம்

*ஐதராபாத், நவ. 26—*

*ஆந்திரப் பிரதேச அமைச்சரவையில் சேருவதற்கு, முன்னாள் முதலமைச்சர் பி. கோபால் ரெட்டி சம்மதித்துள்ளதாக அறிவிக்கப்பட்டுள்ளது.*

*அவர் வரும் வெள்ளிக்கிழமையன்று பதவி ஏற்பார் என ஆந்திர முதலமைச்சர் சஞ்சீவி ரெட்டி தெரிவித்துள்ளார்.*

### கல்வியும்-ஏழ்மையும்!

*கொழிஞ்சாம்பாறை, நவ. 26—*

*"பெற்றோர்களது கல்விக் குறைவும் ஏழ்மைத்தனமும்தான் இந்திய மாணவர்களின் கல்வி தரக் குறைவுக்கு முக்கியமான காரணமாகும்,"*

*என்று, தூய சின்னப்பர் உயர்நிலைப் பள்ளியில் பேசுகையில், 'நவ இந்தியா' நிர்வாக ஆசிரியர் இராமகிருஷ்ணன் குறிப்பிட்டார்.*

### அந்நியரின் சுரண்டல் ஒழிகிறது

#### பொன்வயல் மைசூர் வசம்

*பெங்களூர், நவ. 26—*

*கோலார் தங்கவயல் நிறுவனம் 1956 நவம்பர் 29-ம் தேதிமுதல் மைசூர் அரசாங்கத்தின் வசமாகிறதாம்.*

### அசாம் பள்ளத்தாக்கில் எண்ணெய் கண்டுபிடிப்பு

*அசாம் பள்ளத்தாக்கில் மோரான் என்ற இடத்தில் எண்ணெய் கண்டுபிடிக்கப்பட்டுள்ளதாம்.*

Best copy available.

# நம் நாடு



தி.மு.கத்தின் இதழ் ஆசிரியர் இரா. நெடுஞ்செழியன்

சென்னை 27—11—'56 செவ்வாய்


# காசியும் இராமேசுவரமும்

புதிய பாவங்களைச் செய்து குவிப்பதற்கான ஆண்டவனின் 'அனுமதி'யைப் புதுப்பித்துக் கொள்ள காசிக் கங்கையிலும் இராமேசுவரம் கடலிலும் மூழ்கி எழுவர், பக்தர்கள்!

இப்படி, 'கருமந் தொலைக்கும் இடங்களாக'க் காசியும் இராமேசுவரமும், வடக்கிலும் தெற்கிலுமாய் இரு துருவங்களில், இருவேறு நாடுகளில் அமைந்துள்ளன!

இராமேசுவரம் கடலில் மூழ்குவதோடு காசிக் கங்கையிலும் கட்டையைக் கழுவினால், தொலையாத பாவமெல்லாம் தொடராமல் தொலையும் என்ற மூட நம்பிக்கையில், வடக்கு நோக்கித் தென்னாட்டவர் சிலரும், தெற்கு நோக்கி வடநாட்டவர் பலரும் பன்னெடுங்காலமாகவே வந்து போய்க் கொண்டிருக்கின்றனராம்!

இந்தக் கருமந் தொலைக்கும் 'புண்ணிய யாத்திரை', இருதரப்பாராலும் மேற்கொள்ளப்பட்டு வருவதால், வடநாட்டிற்கும் தென்னாட்டிற்குமிடையே நீண்ட நெடுங்காலமாகவே 'அடிப்படையானதோர் கலாச்சார ஒற்றுமை' இருந்து வருவதாக வாதிடுகிறார், காசிவாசியான ஸ்ரீபிரகாசா!

'கலாச்சார ஒற்றுமை' என்பதற்குக் கவர்னர் பெருமான் காட்டும் வெளிப்படையான உதாரணம் 'காசி இராமேசுவர புண்ணிய யாத்திரை'தான் என்றால் அது மிக வருந்தற்குரியதாகும்.

இரு வேறு நாடுகளின் 'கலாச்சார ஒற்றுமை'க்கு மத மூடநம்பிக்கைகளினால் எழுந்த சில 'புண்ணிய யாத்திரை'களே சான்றுகளாகுமானால், 'கலாச்சாரம்', 'ஒற்றுமை' என்ற சொற்களை, அறிவு உலகு கூறும் பொருள்களை மனதில்கொண்டு உச்சரிக்கக்கூடாது.

'மெக்கா'விற்குப் 'புண்ணிய யாத்திரை' சென்றுவரும் முஸ்லிம்கள் அனைவரும் ஒரே நாட்டவர், ஒரே கலாச்சாரம் கொண்டவர்கள் என்று கருதுவதைவிட மடமை வேறு இருக்க முடியாது. இன்றைய உலகம், முஸ்லீம்கள் அனைவரும் ஒரே நாட்டவர் என்றோ, அல்லது கிறிஸ்துவர்கள் மிகப் பெரும்பான்மையினராக வாழும் ஐரோப்பா முழுவதும் ஒரே நாடு—அங்கு வாழும் மக்களனைவரும் ஒரே கலாச்சாரம் கொண்டவர்கள் என்றோ கருதவில்லை — ஒப்பவில்லை — ஏற்கவில்லை.

காசிவாசியான கவர்னர் பிரகாசா, 'காசி, இராமேசுவரப் புண்ணிய யாத்திரை' வடநாட்டவரையும் தென்னாட்டவரையும் ஒன்றுபடுத்தும் அம்சம்' என வாதிடுகிறார்! என்னே விந்தை!

அவரது ஆசை, 'ஏக இந்தியா' என்ற—தென்னவரின் தொன்மைமிகு தனித்தன்மையை, பெருமைக்குரிய திராவிடப் பண்பாட்டை, சுதந்திர ஆதிபத்திய உரிமையை மறுக்கிற—ஏகாதிபத்திய அரசியல் அமைப்பு, தனது வடநாட்டுச் சோதரர்களுக்குப் போலிப் பெருமையும் பெருவாழ்வும் தருகிறது என்ற காரணத்தினால், சிரந்தரமாக நீடிக்க வேண்டும் என்பதாகும்.

அவரைப் போன்றே அவரது சகாக்களான இதர வடநாட்டுப் பெரியவர்களும், இந்த கீழ்த்தரமான ஆசையைக் கொண்டிருக்கிறார்கள் என்பது, அனைவரும் அறிந்ததே!

'ஆசை வெட்கமறியாது' என்பார்கள். இந்த வடநாட்டுப் பெரியவர்களின் 'ஏகாதிபத்திய ஆசை' வெட்கமறியாமல்தான் — 'ஏற்கனவே 'இந்தியா' ஒன்றாக இருந்ததுதான்' என்று கூறவும் துணிவைக் கொடுக்கிறதுபோலும்!

வடநாட்டுப் பெரியவர்களின் இந்த 'ஏக இந்திய' ஏகாதிபத்திய ஆசை, அந்த அமைப்பிற்கு எதிராக, தென்னாட்டில் இயற்கையான சுதந்திர வேட்கையால் உந்தப்பட்டுத் தோன்றியிருக்கும் விடுதலை இயக்கமான திராவிட முன்னேற்றக் கழகத்தைக் கண்டதும் வெறியாக மாறிக் கொண்டிருப்பதை உலகம் கூர்ந்து கவனித்துக் கொண்டுதான் இருக்கிறது.

முன்னேற்றக் கழகத்தின் வளர்ச்சி உறுதி செய்யப்பட்டு, அதன் பொலிவும் வலுவும் நாளுக்கு நாள் விரிந்து, அதன் நடவடிக்கைகள் மக்களின் பேராதரவைப் பின்னணியாகக் கொண்டு பெருகி வருவதைக் காணும்போது, வடநாட்டுப் பெரியவர்கள், 'இந்தியாவின் ஒற்றுமைக்கு ஆபத்து' என்று ஓலமிடுகிறார்கள்! 'ஒற்றுமையில்தான் நமக்கு உலகில் வளர்ந்து வரும் பெருமை தொங்கிக் கொண்டிருக்கிறது' என்று உபதேசம் புரிகிறார்கள்!

திராவிட முன்னேற்றக் கழகத்தின் வளர்ச்சி, தங்களின் 'ஏக இந்தியா' நீடிக்க வேண்டும் என்ற ஏகாதிபத்திய ஆசையில் வெகு விரைவில் மண் தூவக் காத்திருக்கிறது என்பதையும் உணருகிறார்கள் அந்தப் பெரியவர்கள்! அதனால், ஆத்திரமடைந்த — பலவீனமான நிலையில், 'இந்திய ஒற்றுமைக்கு, ஊறு தேடுவோரை அனுமதியோம்'—என்று மிரட்டுகிறார்கள்!

கவர்னர் பிரகாசா, தென்னாட்டில் — சென்னை மாநிலத்தில் கடந்த நான்காண்டுகளுக்கு மேலாகப் பதவியிலிருந்து நமது கழக வளர்ச்சி பற்றிய உண்மை நிலைகளை ஓரளவேனும் உணர்ந்தவர்; அதனை அவரே அவ்வப்போது ஒப்பியிருக்கிறார். அவர், நமது மாநில மக்களின் வரிப்பணத்திலிருந்து ஒரு கணிசமான தொகையை வடநாட்டுச் சர்க்காரின் 'ஏஜெண்ட்' என்ற முறையில் சம்பளமாகப் பெற்றுக்கொண்டு ஆனந்தமாக வாழ்ந்து வந்தார். அவரது உல்லாசமான சென்னைக் கவர்னர் பதவிக் காலம், 'சில நாட்கள்தான்' என்ற அளவுக்குக் குறுகிவிட்டது.

வழியனுப்பு உபசாரங்களை ஏற்றுக்கொண்டிருக்கிற பிரகாசா, தான் பதவியிலிருந்த நாட்களில், இங்கு தென்னாட்டவரின்—திராவிடரின் விடுதலைக்காக, ஜீவத்துடிப்பு மிக்க இயற்கையான சுதந்திரத் தாகம் கொண்ட திராவிட மக்கள், 'ஏக இந்தியா' என்ற ஏகாதிபத்திய அமைப்பின் சூதவாதுகளை உணர்ந்து, விழிப்புப் பெற்று' விடுதலை இயக்கம் ஒன்றில் அணிவகுத்து வருகிறார்கள் என்ற உண்மையை உணரும் வாய்ப்புப் பெற்றிருந்தவர். அந்த நிலையில், போகிறபோக்கில், கடைசி உபதேசமாக இங்குள்ள ஏமாளிகளுக்கும், கடைசிஎச்சரிக்கையாக தனது வடநாட்டுச் சகாக்களுக்கும் அவர் அளித்திருப்பதுதான், காசி, இராமேசுவர 'புண்ணிய யாத்திரை'கள், இந்திய ஒற்றுமைக்குச் சான்றுகள் என்ற கருத்து!

கவர்னர் பிரகாசாவுக்கு திராவிட மக்கள் 'வழியனுப்பு உபசாரமாக'க் கூறக் கூடியதெல்லாம், வடநாட்டுப் பெரியவர்களின் ஏகாதிபத்திய ஆசையை அடித்து நொறுக்கத் துடிப்பு கொண்டு நிற்கும் விடுதலைப் பட்டாளம் திராவிட முன்னேற்றக் கழக உருவத்தில் மிக வேகமாக வளர்ந்துவருகிறது என்பதை, தான் உணர்ந்துள்ள அளவேனும் தனது வடநாட்டுச் சகாக்கள் உணருமாறு அவர் செய்ய வேண்டுமென்பதே!

# ரஷ்யாவின் இழிசெயலுக்கு யூகோ ஆட்சேபம்!

## நாகி திருட்டுத்தனமாகக் கடத்தப்பட்டது குறித்து ஐ. நா.-வில் புகார்?

நியூயார்க், நவ. 24—

'இம்ரி நாகி, மற்றும் அவரது சகாக்கள் திருட்டுத்தனமாகத் தூக்கிச் செல்லப்பட்ட சம்பவம் குறித்து ஐ. நா. சபையில் விவாதிக்க வேண்டும்' என்று, யூகோ முயற்சிகள் மேற்கொண்டிருப்பதாகத் தெரியவருகிறது.

### ஹங்கேரி தொழிலாளர் கோருவதென்ன?

'நாகி எங்கே? அவரோடு நாங்கள் பேசவேண்டும்' என்று ஹங்கேரி தொழிலாளர்கள், சர்க்காரைக் கேட்டிருக்கின்றனராம்.

தொழிலாளர் கவுன்சிலின் 10 பேர் கொண்ட செயற்குழு, பிரதமர் ஜெனோஸ் காதரிடம் தங்களின் கோரிக்கைகளைத் தந்திருக்கின்றனர்.

இவற்றில், 'இம்ரி நாகியே மீண்டும் பிரதம மந்திரியாக வேண்டும்; ரஷ்யத் துருப்புகள் ஹங்கேரியிலிருந்து வெளியேற வேண்டும்' என்பவையும் முக்கியமானவையாகும்.

### ரஷ்யாவிற்கு யூகோவின் குறிப்பு

நாகி கைது செய்யப்பட்டது குறித்து, ஹங்கேரி, ரஷ்யா ஆகியவற்றிற்கு யூகோ ஒரு ஆட்சேபக் குறிப்பு அனுப்பியிருக்கிறது

ரஷ்யாவுக்கு அனுப்பியுள்ள யூகோ குறிப்பினடியில் காணப்படுவதாவது:—

"யூகோவுக்கும் ஹங்கேரிக்கும் இருந்த தகராறுக்குரிய ஒரு விஷயத்தை, நட்பு முறையில் தீர்த்து வைக்கக்கூடிய ஒரு ஒப்பந்தத்தை நிறைவேற்றுவதில் ஹங்கேரியில் உள்ள ரஷ்ய இராணுவம் தலையிட்டுக் கெடுத்திருப்பது எங்களுக்கு ஆச்சரியமாயிருக்கிறது!

### யூகோ நிலை மாறுகிறது

'காதர் சர்க்காருக்கு உதவி வேண்டும்' என்றும், 'ஹங்கேரியிலிருந்து எவரும் நாடு கடத்தப்படவில்லை,' என்றதுமான யூகோவின் முந்தைய நிலை, இப்போது, 'நாகி ரஷ்யாவினால்தான் கைது செய்யப்பட்டார்,' என்ற அறிவிப்பின் மூலம் மாற்றிக்கொள்ளப்பட்டிருக்கிறது.

யூகோ வெளிநாட்டிலாகா அதிகாரி ஒருவர் 'நாகி தம்மிஷ்டமாக ருமேனியா செல்லவில்லை; ரஷ்ய இராணுவத்தினால்தான் திருட்டுத்தனமாகக் கடத்தப்பட்டிருக்கிறார்,' என்று திட்டவட்டமாக கூறியிருக்கிறார்.

'நாகி கடத்தப்பட்டது, ஹங்கேரியிலிருந்து பலர் ஏற்கனவே ரஷ்யாவிற்குக் கடத்தப்பட்டிருக்கின்றனர் என்பதைச் சொல்லுகின்றன—உறுதிசெய்கின்றன,' என்றும் அவர் கூறியிருக்கிறார்.

## உள்நாட்டுக் கால்வாய்கள் மூலம் கொச்சி-கல்கத்தா இணைப்பு திட்டம்

புதுடில்லி, நவ. 23—

உள்நாட்டு கால்வாய்களின் மூலம் கொச்சியையும் கல்கத்தாவையும் இணைப்பதற்கும், நர்மதை நதியுடன் கங்காநதியை இணைப்பதற்கும் திட்டமொன்று தயாரிக்கப்பட்டுள்ளதாம்.

## தீண்டாமை ஒழிப்புக்கு சேவை செய்பவர்களுக்கு!

### தங்கப் பதக்கங்கள் வழங்க சர்க்கார் முடிவு

சென்னை, நவ. 25—

தீண்டாமை ஒழிப்பு விஷயத்தில் சிறந்த சேவை புரியும் கிராமாதிகாரிகளுக்கும் சமூக ஊழியர்களுக்கும் அரசாங்கம் தங்கப் பதக்கங்கள் வழங்க முடிவு செய்துள்ளதாம்.

ஆண்டுதோறும் ஒவ்வொரு மாவட்டத்திலும், ரூ. 100 மதிப்புள்ள இரண்டு பதக்கங்களும் ரூ. 50 மதிப்புள்ள ஆறு பதக்கங்களும் வழங்கப்படுமாம்.

இந்தப் பதக்கங்கள் வழங்குவதற்கு, 1956-ம் ஆண்டிற்கு ரூ. 6,000 அனுமதிக்கப்பட்டிருக்கிறது.

தீண்டப்படாத தாழ்த்தப்பட்ட மக்களுக்கு கிணறுகளைத் திறந்து விடுவது, சிற்றுண்டிச் சாலைகளில் அனுமதிப்பது, கலப்பு மணம் செய்துவைப்பது ஆகியன போன்றவைகளுக்கு முதல் தரப் பதக்கமும், ஆலயப் பிரவேசம், மற்ற நன்மைகள் செய்வதற்கு இரண்டாந்தரப் பதக்கமும் அளிக்கப்படுமாம்.

## ரூ. 30½ கோடி மதிப்புள்ள எண்ணெய் உற்பத்தி

### திட்டம் பற்றிப் பரிசீலனை செய்ய ரஷ்ய நிபுணர் வருகை

புதுடில்லி, நவ. 26—

அசாம் மாநிலத்தில், ஆண்டுக்கு 50 இலட்சம் டன் எண்ணெய் கிடைக்குமென்றும், இது இந்தியாவின் தேவையில் 56 சதவிகிதம் என்றும் கூறப்படுகிறது.

### ரஷ்ய நிபுணர்கள்

இந்தியாவில் ஆண்டுக்கு ரூ. 30,50,00 000 மதிப்புள்ள எண்ணெய் உற்பத்தித் திட்டத்தைக் குறித்துப் பரிசீலனை செய்வதற்கு ரஷ்யாவிலிருந்து 26 நிபுணர்கள் டிசம்பர் திங்களில் வருகின்றனராம்.

அவர்கள் இங்கு ஆறு திங்கள் தங்கியிருந்து பணியாற்றுவார்கள்; இதற்காக ரூ 14 இலட்சம் ஒதுக்கப்பட்டுள்ளது.

## கேட்டீரா, சேதி!

திருமணம் புரிந்துகொண்டு வாழும் தம்பதிகளின் வளத்தைக் கண்டறிய குழு ஒன்று அமைக்கப்பட்டதாம்.

1930-ம் ஆண்டிற்குப் பிறகு மணம் புரிந்துகொண்ட தம்பதிகள் அதிகப்படியான குழந்தைகளைப் பெற்றுள்ளனராம்.

மேலும், நகரங்களில் வாழும் தம்பதிகளைவிட கிராமப்புறங்களில் வாழ்பவர்கள் மிகக் குறைவாகக் குழந்தைகளை பெற்றுள்ளதாகவும், இதற்கு முக்கிய காரணம் சிறு வயதிலேயே மணம் முடிப்பது தான் என்றும் கூறப்பட்டுள்ளது.

★

# யூகோ சர்க்கார் இதழ் தரும் தகவல்

லண்டன், நவ. 26—

ஹங்கேரியின் முன்னாள் பிரதமரான இம்ரி நாகி, கடந்த வியாழனன்று யூகோ தூதுவராலயத்திலிருந்து சென்றபின் என்ன ஆனார் என்ற தகவல்கள் அதிகாரபூர்வமாகக் கிடைக்காவிட்டாலும், அவர் இன்னும் ரஷ்யாவினிடத்தில் கைது செய்யப்பட்ட நிலையில்தான் இருக்கிறார் என்று இங்கு நம்பகமாகத் தெரியவருகிறது

புதாபெஸ்ட், மாஸ்கோ வானொலிகள், இம்ரி நாகி, அவரது வேண்டுகோளின்படியே ருமேனியாவிற்குச் சென்றிருக்கிறார் என்று கூறியுள்ளனவாம். ஆனால் ஹங்கேரி மக்கள், அவர் ருமேனியா வழியாக ரஷ்யாவிற்குக் கொண்டு செல்லப்படுகிறார் என்றே கூறுகின்றனராம்.

### யூகோ தரும் தகவல்

யூகோ சர்க்காரின் அதிகாரபூர்வமான பத்திரிகையான 'பார்பா' இதழ், நாகி பற்றி கூறுவதாவது:-

"நாகியும், மற்றும் அவரது சகாக்கள் 11 பேரும் யூகோ தூதுவராலயத்தில் நவ. 4-ந் தேதியன்று சரண் புகுந்தார்கள்.

"அவர்கள் பத்திரமாக வீட்டிற்குக் கொண்டு செல்லப்படுவார்கள் என்று ஹங்கேரி சர்க்கார் உறுதிமொழி தந்துவிட்டு, அவர்களைப் பஸ் ஒன்றில் ஏற்றிச் சென்றனர்; இரு யூகோ தூதுவராலய ஊழியர்களும் உடன் சென்றனர்.

### நடுவழியில் கைது

"அவர்கள் வீடுநோக்கிச் சென்றுகொண்டிருக்கும்போது ரஷ்யப் பாதுகாப்பு அதிகாரிகள், நடுவழியில் அவர்களை மறித்துக் கைது செய்திருக்கின்றனர்.

"யூகோ தூதுவராலய அதிகாரிகள் இதை ஆட்சேபித்தும் கேட்காமல், ஆட்சேபித்த அதிகாரிகளை வீதியில் தூக்கி எறிந்துவிட்டுக் கைது செய்து சென்றனர், ரஷ்ய அதிகாரிகள்!

"நாகியும் இதரரும், அவர்களது விருப்பத்தின் பேரிலேயே ருமேனியா சென்றுள்ளனர் என்று கூறப்படுவது பொய்! அவர்கள் ரஷ்யாவிற்குத்தான் கடத்தப்படுகின்றனர்.

"நாகி ஒருபோதும் எந்த வெளிநாட்டுக்கும் சென்று வாழுவதை விரும்பவில்லை. ஹங்கேரி அரசியலில் மீண்டும் பங்கு கொள்ள முடியும் என்றே அவர் நம்பி வந்திருக்கிறார்."

### பேச்சுவார்த்தை?

ஹங்கேரியில் அமைதி ஏற்படுவது குறித்து மத்திய தொழிலாளர் குழுவிற்கும் அரசாங்கத்திற்குமிடையே பேச்சு வார்த்தைகள் நடந்து வருகிறதாம்.

முன்னாள் பிரதமர் இம்ரி நாகி மீண்டும் பதவிக்கு வரவேண்டும் என்பது இவர்களுடைய கோரிக்கைகளில் ஒன்றாகும்.

One side of the page is dark



# பணிக்கம்பட்டி தி.மு.கழக கட்டிடத் திறப்பு விழா

## அண்ணா, நடராசன், அம்பில் தர்மலிங்கம், மணி ஆகியோர் கலந்துகொண்டனர்

குளித்தலையை அடுத்த பணிக்கம்பட்டி தி. மு. கழகக் கிளையினர் பெருமுயற்சி எடுத்துக்கொண்டு, கழகத்திற்கென ஏறத்தாழ ரூ. 4,000 மதிப்புள்ள சொந்தக் கட்டிடம் ஒன்றை அமைத்து, அதன் திறப்பு விழாவை, அண்ணா அவர்களைக்கொண்டு 20-11-56 அன்று சிறப்புற நடத்தினர்.

பணிக்கம்பட்டியின் வீதிகள் தோறும் வளைவுகளாலும், தோரணங்களாலும் அலங்கரிக்கப்பட்டிருந்தன.

நூற்றுக்கணக்கான தாய்மார்களும் ஏராளமான தோழர்களும் திரண்டிருந்தனர்; விழா இரவு 8 மணிக்குத் துவங்கிற்று.

தோழர் நல்லுசாமி தலைமை வகித்து கழகக் கிளைக்கான கட்டிடம் அமைக்க அனைவரும் உதவி புரிந்ததை எடுத்துக்கூறி, கழகக் கொள்கை வெற்றியுற அதுபோன்றே அனைவரின் பேராதரவையும் தருமாறு கேட்டுக்கொண்டார்.

தோழர் எம். எஸ். மணி அவர்கள் கழகக் கொடியை ஏற்றி வைத்துப் பேசினார்.

திருச்சி மாவட்டச் செயலாளர் தோழர் அன்பில்-தருமலிங்கம் அவர்கள், கே. வி. கே. சாமியின் உருவப் படத்தைத் திறந்துவைத்து அவர் ஆற்றிய அரும் பணியினை விளக்கினார்.

துணைப் பொதுச்செயலாளர் என். வி. நடராசன் அவர்கள், பணிக்கம்பட்டி கிளைக் கழகத் தோழர்களின் இச்சீரிய முயற்சியைப் பாராட்டியும், அதுபோலவே கழகப் பொதுத் தேர்தலில் ஈடுபட்டுள்ள பணியிலும் பொதுமக்களின் ஆதரவைத் திரட்டுமாறு கேட்டுக் கொண்டார்.

இறுதியாக அண்ணா அவர்கள் கழகக் கட்டிடத்தைத் திறந்து வைத்துச் சொற்பொழிவாற்றுகையில், பணிக்கம்பட்டியிலுள்ள கழகத் தோழர்கள் நிறைவேற்றியுள்ள இப்பெரும் பணி, இவ்வூரிலுள்ள பொதுமக்களின் ஆதரவு கழகத்திற்கு எந்த அளவுக்குப் பெருகி வருகிறதென்பதைச் சுட்டிக் காட்டுகிறதென்றும், இவ்வளவு பேராதரவு தரும் இவ்வூர் பெருமக்களின் நம்பிக்கைக்கு ஏற்ப மேலும் கழகத் தோழர்கள் பணியாற்றுமாறு கேட்டுக்கொண்டும், பணிக்கம்பட்டி கிளைக் கழகத்தினரின் இந்த முயற்சிக்கு கழகத் தோழர்கள் அனைவருமே கடமைப்பட்டிருப்பதாகவும், இக்கிளைக் கழகத்தினருக்குத் தலைமைக் கழகச் சார்பில் தமது நன்றியைத் தெரிவித்துக்கொள்வதாகவும் கூறியதோடு, காங்கிரஸ் ஆட்சியில் ஏழை—எளியவர்களுக்கும், விவசாயத் தொழிலாளர்களுக்கும் ஏற்பட்டுவரும் இன்னல்களை விளக்கியதோடு, பொதுத் தேர்தலில் கழகத்திற்குப் பேராதரவு தருமாறும் கேட்டுக்கொண்டார்கள்.

பணிக்கம்பட்டி தி. மு. கழகக் கிளையின் சார்பில் அண்ணா அவர்களுக்கு வரவேற்பு இதழும், தேர்தல் நிதிக்கு பணிக்கம்பட்டி தி. மு. கழகச் சார்பில் ரூபாய் 55; மாணவத் தோழர் சாமிநாதன் ரூ. 5; பெயர் சூட்டும் வினைவாக ரூ 2-ம் அளிக்கப்பட்டது.

செயலாளர் கந்தசாமி நன்றி நவில, திறப்பு விழா இரவு 11-30 மணிக்கு இனிது முடிவுற்றது.

குளித்தலை முத்துகிருஷ்ணன், பொன்மலை பராங்குசம் ஆகியோர் உடனிருந்து ஆவன செய்தனர்.

★

# மேலச்சேரியில் அண்ணா

## பொதுக்கூட்டத்தில் கருத்துரை வழங்கினர்

கடந்த 9-ந் தேதியன்று செஞ்சி வட்டம் மேலச்சேரி குளக்கரை மைதானத்தில், கிளைக் கழகச் சார்பில் நடைபெற்றப் பொதுக்கூட்டத்தில் அண்ணா அவர்கள் கலந்துகொண்டு அரியதோர் கருத்துரை வழங்கினார்.

செஞ்சி தாலுகாவிலேயே இதுபோல் மக்கள் கூட்டம் திரண்டிராத அளவில் மாபெரும் பொதுக் கூட்டமாக அமைந்திருந்தது அன்றைய கூட்டம்!

பொதுக்கூட்டத்திற்குத் தோழர் கோபால் எம்.எல்.ஏ. அவர்கள் தலைமை வகித்தார்.

தோழர்கள் ஏ. கோவிந்தசாமி எம்.எல்.ஏ., ப. உ. சண்முகம் ஆகியோர் சிறிது நேரம் கொள்கை விளக்கம்தந்தபின், அண்ணா அவர்கள் அரியதோர் சொற்பொழிவு நிகழ்த்தினார்.

தோழர் ஆளவந்தார் நன்றி கூறக் கூட்டம் இனிது முடிவுற்றது. (ந. சி.)

## ஏழை மாணவருக்கு

### இலவச உணவு விடுதி திறப்பு

அருப்புக்கோட்டை — தாலுகாவைச் சேர்ந்த இராமநாய்க்கன்பட்டி நாடார் உறவின்முறை க்ஷத்திரிய உயர்தரத் துவக்கப் பள்ளியில் நவ. 20-ந் தேதியன்று திரு. வி. வி இராமசாமி எம்.எல்.சி. அவர்கள் தலைமையில் ஏழை மாணவர்களுக்கு இலவச நண்பகல் உணவு விடுதியொன்று ஆரம்பிக்கப்பட்டது.

இந்த ஆரம்ப விழாவை, சென்னை மாநில கல்வி இலாகா டைரக்டர் திரு. என். டி. சுந்தரவடிவேலு நடத்திவைத்தார்.

இவ்விழாவில் மதுரை டிவிஷனல் இன்ஸ்பெக்டர் ஜனாப் எம். முகமது கனி, இராமநாதபுரம் மாவட்டக் கல்வி அதிகாரி பி. எஸ் எபனேசர், மதுரை ஆதாரக் கல்வி அதிகாரி ருத்ரப்பா, கல்லுப்பட்டி பயிற்சிப்பள்ளி தலைமை ஆசிரியர் கந்தசாமி, அருப்புக்கோட்டை கல்வி அதிகாரி எஸ். இராமசுப்பு, இராமநாதபுரம் மாவட்டக் கழகத் தலைவர் எஸ். ஆர். நாயுடு, மற்றும் பல பிரமுகர்களும் கலந்துகொண்டனர்.

மேற்படி பள்ளி நிர்வாகி திரு. எஸ். இராமநாத வெயிலுமுத்து அவர்கள், வருகை தந்த அனைவருக்கும் நன்றி கூறிக்கொண்டு, மாநில கல்வி இலாகா டைரக்டருக்கு வாழ்த்துப் பத்திரமும் வாசித்தளித்தார்.

திரு. என். டி. சுந்தரவடிவேலு அவர்கள் ஏழை மாணவர்களுக்கு உணவு வழங்கினார். (ந. சி.)

# தமிழ் இளைஞர் முன்னேற்ற மன்றப் பொதுக்கூட்டம்

## கல்யாணசுந்தரம், கண்ணதாசன் கலந்துகொண்டனர்

25—11—56 மாலை 6 மணியளவில், சென்னை — வேளாளத் தேனாம்பேட்டை தமிழ் இளைஞர் முன்னேற்றக் கழகச் சார்பில் ஒரு பொதுக்கூட்டம், போலீஸ் நிலையத்திற்கு எதிரில் நடைபெற்றது.

கூட்டத்திற்குத் தோழர் இராம வெள்ளையன் தலைமை வகித்தார்

தோழர்கள் கை. பிரமையா, ஏ. டேனியல் ஆகியோர் சிறிது நேரம் பேசியபின், தோழர் கண்ணதாசன் அவர்கள் தி மு கழகம் தேர்தலில் ஈடுபடுவது குறித்தும் முன்பு இல்லாத அளவில் இப்போது கழகத்திற்கு எழுந்துவரும் எதிர்ப்புகள் குறித்தும், பொதுத் தேர்தலில் மக்கள் திராவிட முன்னேற்றக் கழகத்தை ஆதரிக்கக் கேட்டுக் கொண்டும், தேர்தலுக்கான பணிகளில் கழகத் தோழர்கள் ஈடுபடுமாறு கேட்டுக்கொண்டும் சொற்பொழிவாற்றினர்.

அடுத்துத் தோழர் காஞ்சி-கல்யாணசுந்தரம் அவர்கள், ஹங்கேரி, போலந்து நாட்டு நிலைகளை விளக்கியும், இந்த நாட்டுக் கம்யூனிஸ்டுகளின் கொள்கைக் குழப்பத்தை சுட்டிக்காட்டியும், பொதுத் தேர்தலில் கழகத்திற்கு மக்கள் ஆதரவு தரவேண்டுமென்று கேட்டுக்கொண்டும் சொற்பொழிவாற்றினார்.

தோழர் இராம வெள்ளையன் தலைமையுரைக்குப் பின் தோழர் டேனியல் நன்றிகூறக் கூட்டம் இனிது முடிவுற்றது. (ச. சி.)

## கள்ளக்குறிச்சி வட்டத்தில் இரெ. இளம்வழுதி

### சுற்றுப் பயண விவரம்

★

**சோமண்டார்குடி:**

11—11—56 காலை 10-மணிக்கு தி. மு கழகத் துவக்கவிழா தோழர் இளையான் தலைமையில் நடைபெற்றது.

தோழர் தமிழரசன், தி. மு. கழகக் கொடியை ஏற்றுவித்தார்.

பின்னர் தோழர் இரெ. இளம்வழுதி அவர்கள், 'வடநாடும் தென்னாடும்' என்பதைப் பற்றியும், வருகிற பொதுத்தேர்தலில் தி. மு. கழகம் ஏன் தேர்தலில் போட்டியிடுகிறது என்பதைப் பற்றியும் விளக்கமாகப் பேசினார். தலைவர் நன்றி கூற கூட்டம் இனிது முடிந்தது. கூட்டத்தில் கழக நிர்வாகிகளும் தேர்ந்தெடுக்கப்பட்டனர். செயலாளர்: கங்காதரன்; துணைச் செயலாளர்: பூமலை; பொருளாளர்: இராமசாமி; மாவட்டப் பிரதிநிதி: கலிதீர்த்தான்; விளம்பர உறுப்பினர்: வெங்கடேசன்.

**மோகூர்:**

11—11—56 மாலை 2-மணிக்கு தோழர் க. காச்சியப்பன் தலைமையில் தி. மு. கழகத் துவக்கவிழா நடைபெற்றது. தோழர் ஜே. எச். பகதூர் தி. மு. கழகக் கொடியை ஏற்றி வைத்தார். தோழர் இரெ. இளம்வழுதி அவர்கள் கழகக் கொள்கைகளை விளக்கியும் வருகிற பொதுத்தேர்தலில் தி. மு. கழகம் வெற்றியடைய அனைவரும் ஒத்துழைக்குமாறும் கேட்டுக் கொண்டார். தலைவர் நன்றிகூற கூட்டம் இனிது முடிந்தது.

அக்கூட்டத்தில் கிளைக் கழக நிர்வாகிகளும் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். செயலாளர்: மு. இராமசாமி; துணைச்செயலாளர்: செ. முத்தன்; பொருளாளர்: கா. முத்தன், மாவட்டப் பிரதிநிதி: மா. இராசு.

**கள்ளக்குறிச்சி:**

11—11—56 மாலை 6-மணிக்கு கள்ளக்குறிச்சி தி. மு. கழகப் பொதுக்கூட்டம் தோழர் ஜே. எச். பகதூர் தலைமையில் நடைபெற்றது. தோழர்கள் அம்பாயிரம், மு. பாண்டியன் ஆகியோர் பேசினபின் தோழர் இரெ. இளம்வழுதி அவர்கள், வடநாடு—தென்னாடு வேற்றுமைகளை விளக்கியும், காங்கிரஸ் சர்க்காரின் போக்கைக் கண்டித்தும் சொற்பொழிவாற்றினார்.

தலைவர் நன்றி கூறக் கூட்டம் இனிது முடிவுற்றது. (ச. சி.)

# சேலத்தில் தோழர் கண்ணதாசன்

## பல நிகழ்ச்சிகளில் பங்கேற்றார்

4—11—56 காலை 10 மணிக்கு சேலம் 6-வது வட்டம் தி. மு கழகத் துவக்கவிழா, அங்காளம்மன் கோவில் தெருவில் தோழர் வி. கே. வரதராசுலு எம். சி. தலைமையில் நடைபெற்றது.

தோழர் வி சிவப்பிரகாசம் கழகக் கொடியேற்றிவைத்தார்.

தோழர் சிற்றரசு-சுப்பிரமணியம் சிறிது நேரம் பேசினார்.

பின்னர், தோழர் கண்ணதாசன் அவர்கள் கழகக் கட்டிடத்தைத் திறந்துவைத்துப் பேசினார்.

### நகரக் கழக அலுவலகத் திறப்பு

அன்று மாலை 4½ மணிக்கு சென்டிரல் டாக்கீசுக்கு எதிரிலுள்ள நகரக் கழக அலுவலகக் கட்டிடத்தை, தோழர் பி. இராமலிங்கம் தலைமையில் தோழர் கண்ணதாசன் திறந்துவைத்தார்.

அந்த வாடகைக் கட்டிடத்தை விரைவில் கழகத்திற்குச் சொந்தமானதாக்க கழகத் தோழர்கள் முயற்சி செய்யவேண்டுமென்று கேட்டுக்கொண்டு, தாமும் ரூ 201 நன்கொடை தருவதாகக் கூறினார்.

தோழர் கண்ணதாசன் தந்த நன்கொடையைப் பெற்றுக் கொண்டு தலைவர் நன்றி தெரிவித்துக்கொண்டார்.

மாலை 6½ மணிக்கு அம்மாப்பேட்டை (23-வது வட்டம்) கழகச் சார்பில் தோழர் கே. எம். கிருஷ்ணன் தலைமையில் நடைபெற்ற பொதுக்கூட்டத்தில் தோழர்கள் இ. ஆர். கிருஷ்ணன், சுப்பிரமணியம், வி. சிவப்பிரகாசம், எஸ். பி. சின்னையன் ஆகியோர் பேசியபின் தோழர் கண்ணதாசன் பொதுத் தேர்தல் குறித்தும், தமிழகப் பிரச்சினைகள் குறித்தும் சொற்பொழிவாற்றினார். கூட்டத்தில் ஆயிரக்கணக்கான மக்கள் திரண்டிருந்தனர் (ச. சி.)

# ஆமதாபாத்தில் கழக முழக்கம்

## டி. கே. சீனிவாசன் பங்கேற்ற நிகழ்ச்சிகள்

10—11—56 காலை 6 மணிக்கு, தோழர் டி கே சீனிவாசன் ஆமதாபாதுக்கு வருகை வந்தார். கழகத் தோழர்களும் ஆதரவாளர்களும் ஏராளமாகத் திரண்டு இரயில் நிலையத்தில் தோழர் டி. கே. சீனிவாசன் அவர்களை வரவேற்றனர். ஆமதாபாத் மாவட்ட தி. மு. கழகம், சமால்பூர், மணிநகர், நரோடா ஆகிய வட்ட கிளைகள், முத்தமிழ் நாடக மன்றம் ஆகியவற்றின் சார்பாக மலர் மாலைகள் அணிவிக்கப்பட்டன.

அன்று காலை 10-30 மணிக்கு, சமால்பூர் கழகப் பணிமனையில் தோழர் இரா. தணிகாசலம் தலைமையிலும் தோழர் டி கே. சீனிவாசன் முன்னிலையிலும், கழக நிர்வாகிகள் கூட்டம் நடைபெற்றது

அன்று மாலை 6-30 மணிக்கு மீண்டும் கழக நிர்வாகிகள் கூட்டம் ஆரம்பிக்கப்பட்டு, கழக ஆக்க வேலைகள் பற்றியும் தி மு. கழகத் தேர்தல் நிதி அளிப்பு பற்றியும் முடிவு செய்யப்பட்டது. இரவு 10 மணிக்கு, தோழர் டி. கே. சீனிவாசன், கழகம் தேர்தலில் கலந்து கொள்ளும் நிலையை விளக்கிப் பேசினார்.

11—11—56 காலை 9½ மணிக்கு காந்தி கதர் ஸ்டோர் மேல் மாடியில், ஆ. தி மு. கழகப் பொது உறுப்பினர் கூட்டம் தோழர் இரா. தணிகாசலம் தலைமையில் நடைபெற்றது.

தோழர் டி. கே. சீனிவாசன் அவர்கள் தி. மு. கழகம் தேர்தலில் ஈடுபடுவது குறித்து விளக்கம் தந்தார். பின்னர், தி. மு. கழகத் தேர்தல் நிதியாக ரூ. 1000-க்குக் குறையாமல் அனுப்பித் தருவது என தீர்மானிக்கப்பட்டது.

அன்று மாலை 5-30 மணிக்கு, திரு. வி. க. திடலில் கே. வி. கே. சாமி அரங்கில், ஆமதாபாத் தி மு. கழக ஆறாம் ஆண்டு நிறைவு விழா நடைபெற்றது. தோழர் ஆர். பி. சுந்தரம் விழாவைத் துவக்கி வைத்தார். தோழர் இரா. நடராசன் வரவேற்புரையாற்றினார். கூட்டத்திற்குத் தோழர் இரா. தணிகாசலம் தலைமை வகித்தார். தோழர் ச. சந்திரன் தி. மு கழகக் கொடி ஏற்றுவித்தார். பின்னர், தோழர் டி. கே. சீனிவாசன் அவர்கள் அரியதோர் உரை நிகழ்த்தினார்.

பின்னர், முத்தமிழ் நாடக மன்றத்தாரின் வில்லுப் பாட்டும் 'விதவை' நாடகமும் நடைபெற்றது.

இறுதியில், முக்கியத் தீர்மானங்கள் பல நிறைவேற்றப்பட்டன.

# அணைக்கரை தி. மு. க. துவக்க விழா

## பொதுச்செயலாளர் இரா. நெடுஞ்செழியன் கலந்துகொண்டார்

கடந்த 19-ந் தேதியன்று மாலை, அணைக்கரை தி. மு. கழகத் துவக்க விழாப் பொதுக்கூட்டம் தோழர் தென்னவன் தலைமையில் நடைபெற்றது.

தோழர்கள் பொ. தருமன், ம. கோ. மணி ஆகியோர் சிறிது நேரம் பேசியபின், பொதுச்செயலாளர் இரா. நெடுஞ்செழியன் அவர்கள், காங்கிரஸ் சர்க்காரின் ஆட்சியின்கீழ் தென்னக மக்களுக்கு எந்தவிதத்திலும் நன்மை இல்லை என்பதை எடுத்துக்காட்டியும், எனவே தென்னகம் வளம் பெற்று வாழ, திராவிட மக்கள் அனைவரும் விழிப்புற்றெழுந்து திராவிட நாட்டைப் பெறப் பாடுபட வேண்டுமென்று கேட்டுக் கொண்டும், தி. மு. கழகம் தேர்தலில் ஈடுபட இருப்பதின் நோக்கத்தை விளக்கியும் சொற்பொழிவாற்றினார்.

அன்று முழுவதும் இடைவிடாது மழை பெய்தும்கூட, அம்மழையையும் பொருட்படுத்தாது ஏராளமான மக்கள் கூட்டத்தில் திரண்டிருந்து, பொதுச்செயலாளர் அவர்களுடைய கருத்துரைகளைக் கேட்ட நிகழ்ச்சி பாராட்டத்தக்கதாக இருந்தது.

தலைவர் முடிவுரையுடன் நன்றி கூறக் கூட்டம் இனிது முடிவுற்றது. (ந. சி.)

# வியப்பும் அதிர்ச்சியும் தந்துள்ளதாம்

புதுச்சேரி, நவ. 24—

டிசம்பர் முதல் தேதிமுதல் வேலை நிறுத்தம் செய்வதென துறைமுகத் தொழிலாளர்கள் முடிவு செய்துள்ளது வியப்பையும் அதிர்ச்சியையும் தந்துள்ளதாக இரயில்வே அமைச்சர் சாஸ்திரி கூறியுள்ளார்.

தொழிலாளர்களின் குறைகளைக் கவனிக்க ஒரு அதிகாரியை நியமித்துள்ளனராம். மேலும் அந்தப் பகுதியில் குழுவை நிறுவ அரசாங்கம் தயாராக உள்ளதாம்.

## ஏழை குடும்பங்களுக்கு

### நஷ்ட ஈடு தரப்படுமாம்

புதுச்சேரி, நவ. 24—

புதுவையில் புதிய கப்பல் துறை கட்டுவதற்கு எடுத்துக்கொள்ளப்படும் நிலத்திலிருந்து வெளியேறும் ஏழைக் குடும்பங்களுக்கு இந்திய அரசாங்கம் போதுமான நஷ்டஈடு தரும் என்று இரயில்வே அமைச்சர் வாக்களித்துள்ளார்.

REGD. NO. M. 6311 ★ தனி இதழ் 1 அணு ★ இலங்கையில் 10 சதம் ★ PHONE: 55630

# நம் நாடு

தி.மு.க. தின இதழ் ஆசிரியர் இரா. நெடுஞ்செழியன்

The "Nam Nadu" A Tamil Daily. ★ The Official Organ Of The D.P.F.

மலர் 4] சென்னை: கார்த்திகை 12உ செவ்வாய் (27—11—56) ★ ★ வெளியீடு: கார்த்திகை 13உ புதன் (28—11—56) [இதழ் 145

## எண்ணெய்க் கப்பல்கள் அணுசக்தியால் இயங்கும்?

★

கடல் மார்க்கங்களில் மிகவும் வேகமாய்ச் செல்லும் பெரிய எண்ணெய்க் கப்பல்களை சிக்கனமாக இயக்குவதில் சுமார் ஐந்து ஆண்டுகளில் பழைய எரி பொருள்களோடு அணுசக்தி போட்டியிடக்கூடுமாம்!

அணுசக்தியால் இடக்குவதின் நான்கு வித்தியாசமான முறைகள் பற்றிய மாதிரி அமைப்பு குறித்த ஆற ஆராய்ச்சிகளை அமெரிக்க அரசாங்கம் செய்துகொண்டிருக்கிறதாம்!

# உண்மையை விழுங்குகிருர் நிதி மந்திரி!

## காங்கிரசாருக்கு உள்ளமிருந்தால் வெட்கப்படட்டும்

### தூத்துக்குடியில் துவங்கிய தொழில் நடைபெருதது ஏன்?

### மந்திரிகள் பதில் கூறுவார்களா?

### சென்னையில் அண்ணு முழக்கம்

"தஞ்சைக் கூட்டம் ஒன்றில் பேசும்போது நிதியமைச்சர் சுப்பிரமணியம், 'தொழில் துறையில் தென்னுடு பின்தங்கிக் கிடக்கிறது' என்று குறிப்பிட்டிருக்கிருர். கூட்டத்திலிருந்தவர்கள், மந்திரியே உண்மையை ஒப்புவது கேட்டு, 'கேளுங்கள்! கேளுங்கள்!' என்று குரல் எழுப்பியிருக்கிருர்கள். இந்தக் குரலைக் கேட்ட மந்திரி, உடனே, தான் கக்கியதை திரும்ப வாரி எடுத்து விழுங்கியிருக்கிருர், அதே கூட்டத்தில்!

"'தொழில் துறையில் தென்னுடு பின்தங்கியிருக்கிறதென்று நான் கூறுவதால், நீங்கள், 'கேளுங்கள், கேளுங்கள்' என்று குரல் கொடுக்கிறீர்கள்; இப்போது கேளுங்கள்—தொழில் துறையில் தென்னுடு பின்தங்கியிருக்கிறது என்பதாலேயே, நான் வடநாடு தென்னுடு என்று பிரித்துப் பேசுவதாகக் கருதக் கூடாது' என்று கூறினராம்!

"உடனே கூட்டத்திலிருந்தவர்கள் 'வெட்கம்! வெட்கம்!' என்று கூவியிருக்கிருர்கள்!

"வாந்தியெடுத்ததைத் திரும்ப விழுங்குபவர்கள் இருக்கமாட்டார்கள். ஆனல், மந்திரி சுப்பிரமணியம், தான் கத்தியதையே திரும்ப விழுங்கும் இரங்கத்தக்க பரிதாப நிலையில் இருக்கிருர்; நாம் அதற்காக மிக வருந்துகிருேம்,"

—என்று, அண்ணு அவர்கள், கடந்த 24—11—56ந் தேதியன்று, சென்னை மூலக்கொத்தளம் அழகிரி மன்ற ஆண்டுவிழாவில் பேசும்போது குறிப்பிட்டார்.

#### காமராசர் கூற்று

தொடர்ந்து பேசுகையில் அண்ணு அவர்கள் குறிப்பிட்டதாவது:—

"காமராசர் சமீப காலமாக பேசும்போதெல்லாம், 'தொழில் துறையில் வடநாடு வளர்ந்திருக்கிறது — தென்னுடு வளரவில்லை என்று கூறினல் மட்டும் போதுமா? வடநாட்டு முதலாளிகள், தனிப்பட்டவர்கள் பெரும் தொழில்களைத் துவக்கி வளர்க்கிருர்கள்; இங்குள்ளவர்களும் துவக்கட்டுமே, யார்வேண்டாமென்ருர்கள்? அதை விடுத்து, வடநாடு தென்னுடு என்று பேசினல்மட்டும் போதுமா?': என்று குறிப்பிட்டு வருகிருராம்!

"இதுபோலவே நிதி மந்திரி சுப்பிரமணியமும் கூறுவதாக அறிகிறேன்.

'நான் ஒரு சம்பவத்தைக் குறிப்பிட்டுக் கூறுகிறேன்; அவர்கள் என்ன பதில் சொல்கிருர்கள் என்று பார்க்கலாம்.

#### சென்னை மந்திரிகள் கேட்பார்களா?

"தூத்துக்குடியில் உப்பளங்கள் ஏராளம் உண்டு; அங்கு சுண்ணும்புக் கற்களும் ஏராளமாகக் கிடைக்கின்றன; இந்த வாய்ப்புகளை வைத்துக்கொண்டு, அங்கு சோடா உப்பு தயாரிக்கும் விஞ்ஞானத் தொழிற்சாலை ஒன்றை 1953-ல் துவக்கத் திட்டமிட்டார், ஒரு தென்னுட்டுக்காரர்! அங்கு குளோரைட், குளோரியம் முதலிய பொருள்களும் உற்பத்தி செய்யத் திட்டமிடப்பட்டது.

"இந்தத் தொழிற்சாலைக்குத் தேவையானது ஒரு கோடி ரூபாய் மூலதனம்; இதை, அந்தத் தொழில் துவக்க விரும்பியவர், பல பேரைச் சேர்த்துக் கொண்டு திரட்ட முற்பட்டார்; சென்னை சர்க்காரும் ரூ. 10 இலட்சம் பங்கு வாங்கினர்கள்.

"அந்தத் தென்னுட்டுக்காரர், தொழிற்சாலைக்கான வேலைகளை எல்லாம் மும்முரமாகச் செய்தார்; 100 ஏகர் நிலம் வாங்கினர்; பாளையங்கோட்டைக்கும் தூத்துக்குடிக்குமிடையே நல்ல பாதை அமைக்க ஏற்பாடு செய்தார்.

"தொழிற்சாலைக்கான கட்டிடம், அதிகாரிகளுக்கான பங்களாக்கள், தொழிலாளருக்கான வீடுகள் கட்டினர்.

"சுவிட்சர்லாந்திலிருந்து நிபுணர்களை வரவழைத்தார்.

"ஆறு இலட்சம் ரூபாய் பெறுமான இயந்திரச் சாதனங்களை இறக்குமதி செய்தார்; சுவிட்சர்லாந்திற்கே ஒருமுறை போய் வந்தார்.

"புதிய இரயில்வே நிலையம் திறக்கப்பட்டது; டெலிபோன் வசதிகள் செய்யப்பட்டன

"1953-ல், மைசூர் மகாராஜா தொழிற்சாலையைத் துவக்கியும் வைத்துவிட்டார்.

"ஆனல், தொழில் நடக்கவில்லை, இன்று!

"இத்தனை ஏற்பாடுகளும் பூர்த்தியாகி, தொழிற்சாலை மைசூர் மகாராஜாவால் திறந்து வைக்கப்பட்ட பிறகும், தொழிற்சாலை வேலை செய்யவில்லை; ஏன்? உண்மையான காங்கிரஸ்காரர்கள் பதில் சொல்வார்களா? எண்ணிப் பார்ப்பார்களா?

#### 1955-ல்!

"1955-ல், அதே இடத்தில், அதே போன்றதொரு தொழிற்சாலை துவக்க டெல்லி சர்க்கார், மதுரை டி. வி. எஸ். கம்பெனிக்கு ஒரு அனுமதி வழங்கினர்கள்; 1953-ல் துவக்கப்பட்ட தொழிற்சாலைக்கு அனுமதி இல்லை என்ருர்கள்.

"டி. வி. எஸ். கம்பெனியார், தங்களுக்குக் கிடைத்த அனுமதியை, சௌராஷ்டிரா (வடநாட்டில்)வில் உள்ள ஒரு கம்பெனிக்கு விற்றுவிட்டார்கள்.

#### அநியாயம்!

"'இந்த அநியாயத்தை, டில்லிக்கும் சென்னைக்கும் முறையிட்டேன்; பலன் இல்லை' என்று, அந்த தூத்துக்குடிக்காரர் கூறியிருக்கிருர்

"'எதைச் செய்ய வேண்டும்—எதைச் செய்யக்கூடாது என்ற அதிகாரம் டில்லியிடம் இருப்பதால்தான் இந்த அநியாயம் நடைபெற்றிருக்கிறது' என்று, தூத்துக்குடிக்காரர் குமுறியிருக்கிருர்.

#### பாவாடை நாடாவில் தொங்குகிருர்கள்

"'சென்னை மந்திரி சபை, இந்த அநியாயம்பற்றி டில்லியைக் கேட்கவில்லை; கேட்க முடியவில்லை. இந்த மாநில சர்க்கார், டில்லியின் பாவாடை நாடாவில்தான் தொங்கிக் கொண்டிருக்கிறது' என்று அவர் உள்ளம் நொந்து கூறியிருக்கிருர்.

"இந்த மாநிலத்தின் தொழில் அபிவிருத்தியில் அக்கரை கொண்டவர்கள், இதுபோன்ற அநியாயங்களைக் கண்டிக்க வேண்டும். இந்த நாடு தொழில் துறையில் முன்னேறுவதற்கு, இந்த நாட்டிற்குப் பொருளாதாரச் சுதந்திரம் வேண்டும்; இல்லாவிடில், நாடு முன்னேருது,' என்று அவர் எச்சரித்திருக்கிருர்!

#### வெட்கப்படுங்கள்

"காங்கிரஸ் நண்பர்களே, குமறலுக்கு ஆளாகி எச்சரிக்கைவிடுத்திருப்பவர் ஒரு காங்கிரஸ்காரர்; ஒரு எம். எல்.ஏ., ஒரு முன்னுள் மந்திரி! உண்மையில் உங்களுக்கு உள்ளம் என்று ஒன்றிருந்தால் வெட்கப்படுங்கள்!

#### என்ன சொல்லப் போகிருர்கள்?

"'தென்னுட்டில் உள்ளவர்கள் தொழில் துவக்கட்டுமே!' என்று கூறுகிற காமராசர்களும் சுப்பிரமணியங்களும், இத்தச் சம்பவம் குறித்து என்ன சொல்லப் போகிருர்கள்?"

## சென்னை நிதி மந்திரியின் நாலாந்தரமான வசைமாரி

### எளம்பிள்ளையில் தி. மு. கழகத்தின்மீது மாசு கற்பிக்க முயற்சி

எளம்பிள்ளை, நவ. 26—

"இந்தியாவை விட்டு மவுண்ட்பாட்டன் பிரபு கப்பலேறும் போது அவருக்கு ஏராளமான தந்திகள் வந்து குவிந்தன; 'எங்களை எல்லாம் விட்டுப் பிரிந்து போகிறீர்களே, நாங்கள் என்ன செய்வோம்?' என்று அவற்றில் பல கூறின. இப்படிப்பட்ட தந்திகளை அனுப்பியவர்கள் யார் என்று பார்க்கும்போது, திராவிட முன்னேற்றக் கழகக்காரர்கள்தான் என்று தெரியவந்தது!

"அப்படி வெள்ளையருடைய காலைப் பிடித்து வாழ்ந்தவர்கள்தான் இந்தத் திராவிட முன்னேற்றக் கழகக்காரர்கள்! அவர்கள் பேச்சை நம்பாதீர்கள்!"

என்று மிக மட்டரகமான முறையில், சேலம் மாவட்டத்தைச் சேர்ந்த எளம்பிள்ளை என்ற ஊரில் கடந்த 22-ந் தேதியன்று திரு. வி. க. நூல் நிலையத்தைத் திறந்து வைக்கும்போது சென்னை நிதிமந்திரி சி. சுப்ரமணியம் பேசியிருக்கிருர். (உ. - நி.)

## எல்லைத் தகராறு: சர்க்கார் கொள்கை!

புதுடில்லி, நவ. 26—

"மாநிலங்களுக்கிடையே எல்லைத் தகராறுகளை உடன்பாட்டின் மூலம் தீர்த்துக்கொள்ளவேண்டும். மற்ற எல்லைத் தகராறுகளை மண்டலக் குழு தீர்த்துவைக்கும்; இதுதான் இந்திய அரசாங்கத்தின் கொள்கையாகும்" என்று இந்திய உள்நாட்டு விவகார அமைச்சர் தத்தார் மக்கள் சபையில் கூறியுள்ளார்.

## ஆந்திர அமைச்சரவையில் கோபாலர் சேருவாராம்

ஐதராபாத், நவ. 26—

ஆந்திரப் பிரதேச அமைச்சரவையில் சேருவதற்கு, முன்னுள் முதலமைச்சர் பி. கோபால் ரெட்டி சம்மதித்துள்ளதாக அறிவிக்கப்பட்டுள்ளது.

அவர் வரும் வெள்ளிக்கிழமையன்று பதவி ஏற்பார் என ஆந்திர முதலமைச்சர் சஞ்சீவி ரெட்டி தெரிவித்துள்ளார்.

## கல்வியும்-ஏழ்மையும்!

கொழிஞ்சாம்பாறை, நவ. 26—

"பெற்ருேர்களது கல்விக் குறைவும் ஏழ்மைத்தனமும்தான் இந்திய மாணவர்களின் கல்வி தரக் குறைவுக்கு முக்கியமான காரணமாகும்,"

என்று, தூய சின்னப்பர் உயர்நிலைப் பள்ளியில் பேசுகையில், 'நவ இந்தியா' நிர்வாக ஆசிரியர் இராம கிருஷ்ணன் குறிப்பிட்டார்.

## அந்நியரின் சுரண்டல் ஒழிகிறது

### பொன்வயல் மைசூர் வசம்

பெங்களூர், நவ. 26—

கோலார் தங்கவயல் நிறுவனம் 1956 நவம்பர் 29-ந் தேதிமுதல் மைசூர் அரசாங்கத்தின் வசமாகிறதாம்.

## அசாம் பள்ளத்தாக்கில் எண்ணெய் கண்டுபிடிப்பு

அசாம் பள்ளத்தாக்கில் மோரான் என்ற இடத்தில் எண்ணெய் கண்டுபிடிக்கப்பட்டுள்ளதாம்.

## பிரிட்டிஷ் கம்யூனிஸ்டுக் கட்சியில் பிளவு!

### 'டெய்லி ஒர்க்கர்' இதழ் தரும் தகவல்

லண்டன், நவ. 26—

'டெய்லி ஒர்க்கர்' என்ற இங்கிலாந்து கம்யூனிஸ்டு கட்சிப் பத்திரிகை, பிரிட்டிஷ் கம்யூனிஸ்டு கட்சியில் பெரியதொரு நெருக்கடி ஏற்பட்டிருப்பதாகக் கூறியிருக்கிறது.

பிரிட்டிஷ் கம்யூனிஸ்டு கட்சியின் சரித்திரத்தில் இல்லாத வகையில், பெரியதொரு தீவிரமான கருத்து வேறுபாடு, பிளவு இப்போது ஏற்பட்டிருப்பதாகவும் அந்தப் பத்திரிகை கூறியிருக்கிறது.

நம் நாடு
தி.மு.க.தின் இதழ் ஆசிரியர் இரா. நெடுஞ்செழியன்
சென்னை 27-11-'56 செவ்வாய்

# காசியும் இராமேசுவரமும்

புதிய பாவங்களைச் செய்து குவிப்பதற்கான ஆண்டவனின் 'அனுமதி'யைப் புதுப்பித்துக் கொள்ள காசிக் கங்கையிலும் இராமேசுவரம் கடலிலும் மூழ்கி எழுவர், பக்தர்கள்!

இப்படி, 'கருமந் தொலைக்கும் இடங்களாக'க் காசியும் இராமேசுவரமும், வடக்கிலும் தெற்கிலுமாய் இரு துருவங்களில், இருவேறு நாடுகளில் அமைந்துள்ளன!

இராமேசுவரம் கடலில் மூழ்குவதோடு காசிக் கங்கையிலும் கட்டையைக் கழுவினால், தொலையாத பாவமெல்லாம் தொடராமல் தொலையும் என்ற மூட நம்பிக்கையில், வடக்கு நோக்கித் தென்னாட்டவர் சிலரும், தெற்கு நோக்கி வடநாட்டவர் பலரும் பன்னெடுங்காலமாகவே வந்து போய்க் கொண்டிருக்கின்றனராம்!

இந்தக் கருமந் தொலைக்கும் 'புண்ணிய யாத்திரை', இருதரப்பாராலும் மேற்கொள்ளப்பட்டு வருவதால், வடநாட்டிற்கும் தென்னாட்டிற்குமிடையே நீண்ட நெடுங்காலமாகவே 'அடிப்படையானதோர் கலாச்சார ஒற்றுமை' இருந்து வருவதாக வாதிடுகிறார், காசிவாசியான ஸ்ரீபிரகாசா!

'கலாச்சார ஒற்றுமை' என்பதற்குக் கவர்னர் பெருமான் காட்டும் வெளிப்படையான உதாரணம் 'காசி இராமேசுவர புண்ணிய யாத்திரை'தான் என்றால் அது மிக வருந்தற்குரியதாகும்.

இரு வேறு நாடுகளின் 'கலாச்சார ஒற்றுமை'க்கு மத மூடநம்பிக்கைகளினால் எழுந்த சில 'புண்ணிய யாத்திரை'களே சான்றுகளாகுமானால், 'கலாச்சாரம்', 'ஒற்றுமை' என்ற சொற்களை, அறிவு உலகு கூறும் பொருள்களை மனதில்கொண்டு உச்சரிக்கக்கூடாது.

'மெக்கா'விற்குப் 'புண்ணிய யாத்திரை' சென்றுவரும் முஸ்லிம்கள் அனைவரும் ஒரே நாட்டவர், ஒரே கலாச்சாரம் கொண்டவர்கள் என்று கருதுவதைவிட மடமை வேறு இருக்க முடியாது. இன்றைய உலகம், முஸ்லீம்கள் அனைவரும் ஒரே நாட்டவர் என்றோ, அல்லது கிறிஸ்துவர்கள் மிகப் பெரும்பான்மையினராக வாழும் ஐரோப்பா முழுவதும் ஒரே நாடு—அங்கு வாழும் மக்களனைவரும் ஒரே கலாச்சாரம் கொண்டவர்கள் என்றோ கருதவில்லை — ஒப்பவில்லை — ஏற்கவில்லை.

காசிவாசியான கவர்னர் பிரகாசா, 'காசி, இராமேசுவரப் புண்ணிய யாத்திரை' வடநாட்டவரையும் தென்னாட்டவரையும் ஒன்றுபடுத்தும் அம்சம்' என வாதிடுகிறார்! என்னே விந்தை!

அவரது ஆசை, 'ஏக இந்தியா' என்ற—தென்னவரின் தொன்மைமிகு தனித்தன்மையை, பெருமைக்குரிய திராவிடப் பண்பாட்டை, சுதந்திர ஆதிபத்திய உரிமையை மறுக்கிற—ஏகாதிபத்திய அரசியல் அமைப்பு, தனது வடநாட்டுச் சோதரர்களுக்குப் போலிப் பெருமையும் பெருவாழ்வும் தருகிறது என்ற காரணத்தினால், நிரந்தரமாக நீடிக்க வேண்டும் என்பதாகும்.

அவரைப் போன்றே அவரது சகாக்களான இதர வடநாட்டுப் பெரியவர்களும், இந்த கீழ்த்தரமான ஆசையைக் கொண்டிருக்கிறார்கள் என்பது, அனைவரும் அறிந்ததே!

'ஆசை வெட்கமறியாது' என்பார்கள். இந்த வடநாட்டுப் பெரியவர்களின் 'ஏகாதிபத்திய ஆசை' வெட்கமறியாமல்தான் — 'ஏற்கனவே 'இந்தியா' ஒன்றாக இருந்ததுதான்' என்று கூறவும் துணிவைக் கொடுக்கிறதுபோலும்!

வடநாட்டுப் பெரியவர்களின் இந்த 'ஏக இந்திய' ஏகாதிபத்திய ஆசை, அந்த அமைப்பிற்கு எதிராக, தென்னாட்டில் இயற்கையான சுதந்திர வேட்கையால் உந்தப்பட்டுத் தோன்றியிருக்கும் விடுதலை இயக்கமான திராவிட முன்னேற்றக் கழகத்தைக் கண்டதும் வெறியாக மாறிக் கொண்டிருப்பதை உலகம் கூர்ந்து கவனித்துக் கொண்டுதான் இருக்கிறது.

முன்னேற்றக் கழகத்தின் வளர்ச்சி உறுதி செய்யப்பட்டு, அதன் பொலிவும் வலுவும் நாளுக்கு நாள் விரிந்து, அதன் நடவடிக்கைகள் மக்களின் பேராதரவைப் பின்னணியாகக் கொண்டு பெருகி வருவதைக் காணும்போது, வடநாட்டுப் பெரியவர்கள், 'இந்தியாவின் ஒற்றுமைக்கு ஆபத்து' என்று ஓலமிடுகிறார்கள்! 'ஒற்றுமையில்தான் நமக்கு உலகில் வளர்ந்து வரும் பெருமை தொங்கிக் கொண்டிருக்கிறது' என்று உபதேசம் புரிகிறார்கள்!

திராவிட முன்னேற்றக் கழகத்தின் வளர்ச்சி, தங்களின் 'ஏக இந்தியா' நீடிக்க வேண்டும் என்ற ஏகாதிபத்திய ஆசையில் வெகு விரைவில் மண் தூவக் காத்திருக்கிறது என்பதையும் உணருகிறார்கள் அந்தப் பெரியவர்கள்! அதனால், ஆத்திரமடைந்த — பலவீனமான நிலையில், 'இந்திய ஒற்றுமைக்கு, ஊறு தேடுவோரை அனுமதியோம்'--என்று மிரட்டுகிறார்கள்!

கவர்னர் பிரகாசா, தென்னாட்டில் — சென்னை மாநிலத்தில் கடந்த நான்காண்டுகளுக்கு மேலாகப் பதவியிலிருந்து நமது கழக வளர்ச்சி பற்றிய உண்மை நிலைகளை ஓரளவேனும் உணர்ந்தவர்; அதனை அவரே அவ்வப்போது ஒப்பியிருக்கிறார். அவர், நமது மாநில மக்களின் வரிப்பணத்திலிருந்து ஒரு கணிசமான தொகையை வடநாட்டுச் சர்க்காரின் 'ஏஜெண்ட்' என்ற முறையில் சம்பளமாகப் பெற்றுக்கொண்டு ஆனந்தமாக வாழ்ந்து வந்தார். அவரது உல்லாசமான சென்னைக் கவர்னர் பதவிக் காலம், 'சில நாட்கள்தான்' என்ற அளவுக்குக் குறுகிவிட்டது.

வழியனுப்பு உபசாரங்களை ஏற்றுக்கொண்டிருக்கிற பிரகாசா, தான் பதவியிலிருந்த நாட்களில், இங்கு தென்னாட்டவரின்—திராவிடரின் விடுதலைக்காக, ஜீவத்துடிப்பு மிக்க இயற்கையான சுதந்திரத் தாகம் கொண்ட திராவிட மக்கள், 'ஏக இந்தியா' என்ற ஏகாதிபத்திய அமைப்பின் சூதுவாதுகளை உணர்ந்து, விழிப்புப் பெற்று' விடுதலை இயக்கம் ஒன்றில் அணிவகுத்து வருகிறார்கள் என்ற உண்மையை உணரும் வாய்ப்புப் பெற்றிருந்தவர். அந்த நிலையில், போகிறபோக்கில், கடைசி உபதேசமாக இங்குள்ள ஏமாளிகளுக்கும், கடைசி எச்சரிக்கையாக தனது வடநாட்டுச் சகாக்களுக்கும் அவர் அளித்திருப்பதுதான், காசி, இராமேசுவர 'புண்ணிய யாத்திரை'கள், இந்திய ஒற்றுமைக்குச் சான்றுகள் என்ற கருத்து!

கவர்னர் பிரகாசாவுக்கு திராவிட மக்கள் 'வழியனுப்பு உபசாரமாக'க் கூறக் கூடியதெல்லாம், வடநாட்டுப் பெரியவர்களின் ஏகாதிபத்திய ஆசையை அடித்து நொறுக்கத் துடிப்பு கொண்டு நிற்கும் விடுதலைப் பட்டாளம் திராவிட முன்னேற்றக் கழக உருவத்தில் மிக வேகமாக வளர்ந்துவருகிறது என்பதை, தான் உணர்ந்துள்ள அளவேனும் தனது வடநாட்டுச் சகாக்கள் உணருமாறு அவர் செய்ய வேண்டுமென்பதே!

## ரஷ்யாவின் இழிசெயலுக்கு யூகோ ஆட்சேபம்!

### நாகி திருட்டுத்தனமாகக் கடத்தப்பட்டது குறித்து ஐ. நா.-வில் புகார்?

நியூயார்க், நவ. 24—

'இம்ரி நாகி, மற்றும் அவரது சகாக்கள் திருட்டுத்தனமாகத் தூக்கிச் செல்லப்பட்ட சம்பவம் குறித்து ஐ. நா. சபையில் விவாதிக்க வேண்டும்' என்று, யூகோ முயற்சிகள் மேற்கொண்டிருப்பதாகத் தெரியவருகிறது.

#### ஹங்கேரி தொழிலாளர் கோருவதென்ன?

'நாகி எங்கே? அவரோடு நாங்கள் பேசவேண்டும்' என்று ஹங்கேரி தொழிலாளர்கள், சர்க்காரைக் கேட்டிருக்கின்றனராம்.

தொழிலாளர் கவுன்சிலின் 10 பேர் கொண்ட செயற்குழு, பிரதமர் ஜெனோஸ் காதரிடம் தங்களின் கோரிக்கைகளைத் தந்திருக்கின்றனர்.

இவற்றில், 'இம்ரி நாகியே மீண்டும் பிரதம மந்திரியாக வேண்டும்; ரஷ்யத் துருப்புகள் ஹங்கேரியிலிருந்து வெளியேற வேண்டும்' என்பவையும் முக்கியமானவையாகும்.

#### ரஷ்யாவிற்கு யூகோவின் குறிப்பு

நாகி கைது செய்யப்பட்டது குறித்து, ஹங்கேரி, ரஷ்யா ஆகியவற்றிற்கு யூகோ ஒரு ஆட்சேபக் குறிப்பு அனுப்பியிருக்கிறது

ரஷ்யாவுக்கு அனுப்பியுள்ள யூகோ குறிப்பினடியில் காணப்படுவதாவது :—

"யூகோவுக்கும் ஹங்கேரிக்கும் இருந்த தகராறுக்குரிய ஒரு விஷயத்தை, நட்பு முறையில் தீர்த்து வைக்கக்கூடிய ஒரு ஒப்பந்தத்தை நிறைவேற்றுவதில் ஹங்கேரியில் உள்ள ரஷ்ய இராணுவம் தலையிட்டுக் கெடுத்திருப்பது எங்களுக்கு ஆச்சரியமாயிருக்கிறது!

#### யூகோ நிலை மாறுகிறது

'காதர் சர்க்காருக்கு உதவி வேண்டும்' என்றும், 'ஹங்கேரியிலிருந்து எவரும் நாடு கடத்தப்படவில்லை,' என்றுமான யூகோவின் முன்னைய நிலை, இப்போது, 'நாகி ரஷ்யாவினால்தான் கைது செய்யப்பட்டார்,' என்ற அறிவிப்பின் மூலம் மாற்றிக்கொள்ளப்பட்டிருக்கிறது.

யூகோ வெளிநாட்டிலாகா அதிகாரி ஒருவர் 'நாகி தம்இஷ்டமாக ருமேனியா செல்லவில்லை; ரஷ்ய இராணுவத்தினால்தான் திருட்டுத்தனமாகக் கடத்தப்பட்டிருக்கிறார்,' என்று திட்டவட்டமாக கூறியிருக்கிறார்.

'நாகி கடத்தப்பட்டது, ஹங்கேரியிலிருந்து பலர் ஏற்கனவே ரஷ்யாவிற்குக் கடத்தப்பட்டிருக்கின்றனர் என்பதைச் சொல்லுகின்றன —உறுதிசெய்கின்றன,' என்றும் அவர் கூறியிருக்கிறார்.

## கொச்சி-கல்கத்தா இணைப்பு திட்டம்

உள்நாட்டுக் கால்வாய்கள் மூலம்

புதுடில்லி, நவ. 23—

உள்நாட்டு கால்வாய்களின் மூலம் கொச்சியையும் கல்கத்தாவையும் இணைப்பதற்கும், நர்மதை நதியுடன் கங்காநதியை இணைப்பதற்கும் திட்டமொன்று தயாரிக்கப்பட்டுள்ளதாம்.

## தீண்டாமை ஒழிப்புக்கு சேவை செய்பவர்களுக்கு!

### தங்கப் பதக்கங்கள் வழங்க சர்க்கார் முடிவு

சென்னை, நவ. 25—

தீண்டாமை ஒழிப்பு விஷயத்தில் சிறந்த சேவை புரியும் கிராமாதிகாரிகளுக்கும் சமூக ஊழியர்களுக்கும் அரசாங்கம் தங்கப் பதக்கங்கள் வழங்க முடிவு செய்துள்ளதாம்.

ஆண்டுதோறும் ஒவ்வொரு மாவட்டத்திலும், ரூ. 100 மதிப்புள்ள இரண்டு பதக்கங்களும் ரூ. 50 மதிப்புள்ள ஆறு பதக்கங்களும் வழங்கப்படுமாம்.

இந்தப் பதக்கங்கள் வழங்குவதற்கு, 1956-ம் ஆண்டிற்கு ரூ. 6,000 அனுமதிக்கப்பட்டிருக்கிறது.

தீண்டப்படாத தாழ்த்தப்பட்ட மக்களுக்கு கிணறுகளைத் திறந்து விடுவது, சிற்றுண்டிச் சாலைகளில் அனுமதிப்பது, கலப்பு மணம் செய்துவைப்பது ஆகியன போன்றவைகளுக்கு முதல் தரப் பதக்கமும், ஆலயப் பிரவேசம், மற்ற நன்மைகள் செய்வதற்கு இரண்டாந்தரப் பதக்கமும் அளிக்கப்படுமாம்.

## ரூ. 30½ கோடி மதிப்புள்ள எண்ணெய் உற்பத்தி

### திட்டம் பற்றிப் பரிசீலனை செய்ய ரஷ்ய நிபுணர் வருகை

புதுடில்லி, நவ. 26—

அசாம் மாநிலத்தில், ஆண்டுக்கு 50 இலட்சம் டன் எண்ணெய் கிடைக்குமென்றும், இது இந்தியாவின் தேவையில் 56 சதவிகிதம் என்றும் கூறப்படுகிறது.

#### ரஷ்ய நிபுணர்கள்

இந்தியாவில் ஆண்டுக்கு ரூ. 30,50,00,000 மதிப்புள்ள எண்ணெய் உற்பத்தித் திட்டத்தைக் குறித்துப் பரிசீலனை செய்வதற்கு ரஷ்யாவிலிருந்து 26 நிபுணர்கள் டிசம்பர் திங்களில் வருகின்றனராம்.

அவர்கள் இங்கு ஆறு திங்கள் தங்கியிருந்து பணியாற்றுவார்கள்; இதற்காக ரூ 14 இலட்சம் ஒதுக்கப்பட்டுள்ளது.

## கேட்டீரா, சேதி!

திருமணம் புரிந்துகொண்டு வாழும் தம்பதிகளின் வளத்தைக் கண்டறிய குழு ஒன்று அமைக்கப்பட்டதாம்.

1930-ம் ஆண்டிற்குப் பிறகு மணம் புரிந்துகொண்ட தம்பதிகள் அதிகப்படியான குழந்தைகளைப் பெற்றுள்ளனராம்.

மேலும், நகரங்களில் வாழும் தம்பதிகளைவிட கிராமப்புறங்களில் வாழ்பவர்கள் மிகக் குறைவாகக் குழந்தைகளை பெற்றுள்ளதாகவும், இதற்கு முக்கிய காரணம் சிறு வயதிலேயே மணம் முடிப்பது தான் என்றும் கூறப்பட்டுள்ளது.

★

## யூகோ சர்க்கார் இதழ் தரும் தகவல்

லண்டன், நவ. 26—

ஹங்கேரியின் முன்னாள் பிரதமரான இம்ரி நாகி, கடந்த வியாழனன்று யூகோ தூதுவராலயத்திலிருந்து சென்றபின் என்ன ஆனார் என்ற தகவல்கள் அதிகாரபூர்வமாகக் கிடைக்காவிட்டாலும், அவர் இன்னும் ரஷ்யாவினிடத்தில் கைது செய்யப்பட்ட நிலையில்தான் இருக்கிறார் என்று இங்கு நம்பகமாகத் தெரியவருகிறது

புதாபெஸ்ட், மாஸ்கோ வானொலிகள், இம்ரி நாகி, அவரது வேண்டுகோளின்படியே ருமேனியாவிற்குச் சென்றிருக்கிறார் என்று கூறியுள்ளனவாம். ஆனால் ஹங்கேரி மக்கள், அவர் ருமேனியா வழியாக ரஷ்யாவிற்குக் கொண்டு செல்லப்படுகிறார் என்றே கூறுகின்றனராம்.

#### யூகோ தரும் தகவல்

யூகோ சர்க்காரின் அதிகாரபூர்வமான பத்திரிகையான 'பார்பா' இதழ், நாகி பற்றி கூறுவதாவது:-

"நாகியும், மற்றும் அவரது சகாக்கள் 11 பேரும் யூகோ தூதுவராலயத்தில் நவ. 4-ந் தேதியன்று சரண் புகுந்தார்கள்.

"அவர்கள் பத்திரமாக வீட்டிற்குக் கொண்டு செல்லப்படுவார்கள் என்று ஹங்கேரி சர்க்கார் உறுதிமொழி தந்துவிட்டு, அவர்களைப் பஸ் ஒன்றில் ஏற்றிச் சென்றனர்; இரு யூகோ தூதுவராலய ஊழியர்களும் உடன் சென்றனர்.

#### நடுவழியில் கைது

"அவர்கள் வீடுநோக்கிச் சென்றுகொண்டிருக்கும்போது ரஷ்யப் பாதுகாப்பு அதிகாரிகள், நடுவழியில் அவர்களை மறித்துக் கைது செய்திருக்கின்றனர்.

"யூகோ தூதுவராலய அதிகாரிகள் இதை ஆட்சேபித்தும் கேட்காமல், ஆட்சேபித்த அதிகாரிகளை வீதியில் தூக்கி எறிந்துவிட்டுக் கைது செய்து சென்றனர், ரஷ்ய அதிகாரிகள்!

"நாகியும் இதரரும், அவர்களது விருப்பத்தின் பேரிலேயே ருமேனியா சென்றுள்ளனர் என்று கூறப்படுவது பொய்! அவர்கள் ரஷ்யாவிற்குத்தான் கடத்தப்படுகின்றனர்.

"நாகி ஒருபோதும் எந்த வெளிநாட்டுக்கும் சென்று வாழுவதை விரும்பவில்லை. ஹங்கேரி அரசியலில் மீண்டும் பங்கு கொள்ள முடியும் என்றே அவர் நம்பி வந்திருக்கிறார்."

#### பேச்சுவார்த்தை?

ஹங்கேரியில் அமைதி ஏற்படுவது குறித்து மத்திய தொழிலாளர் குழுவிற்கும் அரசாங்கத்திற்குமிடையே பேச்சு வார்த்தைகள் நடந்து வருகிறதாம்.

முன்னாள் பிரதமர் இம்ரி நாகி மீண்டும் பதவிக்கு வரவேண்டும் என்பது இவர்களுடைய கோரிக்கைகளில் ஒன்றாகும்.



# பணிக்கம்பட்டி தி.மு.கழக கட்டிடத் திறப்புவிழா

## அண்ணா, நடராசன், அம்பில் தர்மலிங்கம், மணி ஆகியோர் கலந்துகொண்டனர்

குளித்தலையை அடுத்த பணிக்கம்பட்டி தி. மு. கழகக் கிளையினர் பெருமுயற்சி எடுத்துக்கொண்டு, கழகத்திற்கென ஏறத்தாழ ரூ. 4,000 மதிப்புள்ள சொந்தக் கட்டிடம் ஒன்றை அமைத்து, அதன் திறப்பு விழாவை, அண்ணா அவர்களைக்கொண்டு 20-11-56 அன்று சிறப்புற நடத்தினர்.

பணிக்கம்பட்டியின் வீதிகள் தோறும் வளைவுகளாலும், தோரணங்களாலும் அலங்கரிக்கப்பட்டிருந்தன.

நூற்றுக்கணக்கான தாய்மார்களும் ஏராளமான தோழர்களும் திரண்டிருந்தனர்; விழா இரவு 8 மணிக்குத் துவங்கிற்று.

தோழர் நல்லுசாமி தலைமை வகித்து கழகக் கிளைக்கான கட்டிடம் அமைக்க அனைவரும் உதவி புரிந்ததை எடுத்துக்கூறி, கழகக் கொள்கை வெற்றியுற அது போன்றே அனைவரின் பேராதரவையும் தருமாறு கேட்டுக்கொண்டார்.

தோழர் எம். எஸ். மணி அவர்கள் கழகக் கொடியை ஏற்றி வைத்துப் பேசினார்.

திருச்சி மாவட்டச் செயலாளர் தோழர் அன்பில்-தருமலிங்கம் அவர்கள், கே. வி. கே. சாமியின் உருவப் படத்தைத் திறந்துவைத்து அவர் ஆற்றிய அரும் பணியினை விளக்கினார்.

துணைப் பொதுச்செயலாளர் என். வி. நடராசன் அவர்கள், பணிக்கம்பட்டி கிளைக் கழகத் தோழர்களின் இச்சீரிய முயற்சியைப் பாராட்டியும், அதுபோலவே கழகப் பொதுத் தேர்தலில் ஈடுபட்டுள்ள பணியிலும் பொதுமக்களின் ஆதரவைத் திரட்டுமாறு கேட்டுக்கொண்டார்.

இறுதியாக அண்ணா அவர்கள் கழகக் கட்டிடத்தைத் திறந்து வைத்துச் சொற்பொழிவாற்றுகையில், பணிக்கம்பட்டியிலுள்ள கழகத் தோழர்கள் நிறைவேற்றியுள்ள இப்பெரும் பணி, இவ்வூரிலுள்ள பொதுமக்களின் ஆதரவு கழகத்திற்கு எந்த அளவுக்குப் பெருகி வருகிறதென்பதைச் சுட்டிக்காட்டுகிறதென்றும், இவ்வளவு பேராதரவு தரும் இவ்வூர் பெருமக்களின் நம்பிக்கைக்கு ஏற்ப மேலும் கழகத் தோழர்கள் பணியாற்றுமாறு கேட்டுக்கொண்டும், பணிக்கம்பட்டி கிளைக் கழகத்தினரின் இந்த முயற்சிக்கு கழகத் தோழர்கள் அனைவருமே கடமைப்பட்டிருப்பதாகவும், இக்கிளைக் கழகத்தினருக்குத் தலைமைக் கழகச் சார்பில் தமது நன்றியைத் தெரிவித்துக்கொள்வதாகவும் கூறியதோடு, காங்கிரஸ் ஆட்சியில் ஏழை—எளியவர்களுக்கும், விவசாயத் தொழிலாளர்களுக்கும் ஏற்பட்டுவரும் இன்னல்களை விளக்கியதோடு, பொதுத் தேர்தலில் கழகத்திற்குப் பேராதரவு தருமாறும் கேட்டுக்கொண்டார்கள்.

பணிக்கம்பட்டி தி. மு. கழகக் கிளையின் சார்பில் அண்ணா அவர்களுக்கு வரவேற்பு இதழும், தேர்தல் நிதிக்கு பணிக்கம்பட்டி தி. மு. கழகச் சார்பில் ரூபாய் 55; மாணவத் தோழர் சாமிநாதன் ரூ. 5; பெயர் சூட்டும் நினைவாக ரூ 2-ம் அளிக்கப்பட்டது.

செயலாளர் கந்தசாமி நன்றி நவில, திறப்பு விழா இரவு 11-30 மணிக்கு இனிது முடிவுற்றது.

குளித்தலை முத்துகிருஷ்ணன், பொன்மலை பராங்குசம் ஆகியோர் உடனிருந்து ஆவன செய்தனர்.

★

## மேலச்சேரியில் அண்ணா

### பொதுக்கூட்டத்தில் கருத்துரை வழங்கினார்

கடந்த 9-ந் தேதியன்று செஞ்சி வட்டம் மேலச்சேரி குளக்கரை மைதானத்தில், கிளைக் கழகச் சார்பில் நடைபெற்றப் பொதுக்கூட்டத்தில் அண்ணா அவர்கள் கலந்துகொண்டு அரியதோர் கருத்துரை வழங்கினார்.

செஞ்சி தாலுகாவிலேயே இதுபோல் மக்கள் கூட்டம் திரண்டிராத அளவில் மாபெரும் பொதுக்கூட்டமாக அமைந்திருந்தது அன்றைய கூட்டம்!

பொதுக்கூட்டத்திற்குத் தோழர் கோபால் எம்.எல்.ஏ. அவர்கள் தலைமை வகித்தார்.

தோழர்கள் ஏ. கோவிந்தசாமி எம்.எல்.ஏ., ப. உ. சண்முகம் ஆகியோர் சிறிது நேரம் கொள்கை விளக்கம்தந்தபின், அண்ணா அவர்கள் அரியதோர் சொற்பொழிவு நிகழ்த்தினார்.

தோழர் ஆளவந்தார் நன்றி கூறக் கூட்டம் இனிது முடிவுற்றது. (ந. கி.)

## ஆமதாபாத்தில் கழக முழக்கம்

### டி. கே. சீனிவாசன் பங்கேற்ற நிகழ்ச்சிகள்

10—11—56 காலை 6 மணிக்கு, தோழர் டி. கே. சீனிவாசன் ஆமதாபாதுக்கு வருகை வந்தார். கழகத் தோழர்களும் ஆதரவாளர்களும் ஏராளமாகத் திரண்டு இரயில் நிலையத்தில் தோழர் டி. கே. சீனிவாசன் அவர்களை வரவேற்றனர். ஆமதாபாத் மாவட்ட தி. மு. கழகம், சமால்பூர், மணிநகர், நரோடா ஆகிய வட்டக் கிளைகள், முத்தமிழ் நாடக மன்றம் ஆகியவற்றின் சார்பாக மலர் மாலைகள் அணிவிக்கப்பட்டன.

அன்று காலை 10-30 மணிக்கு, சமால்பூர் கழகப் பணிமனையில் தோழர் இரா. தணிகாசலம் தலைமையிலும் தோழர் டி. கே. சீனிவாசன் முன்னிலையிலும், கழக நிர்வாகிகள் கூட்டம் நடைபெற்றது

அன்று மாலை 6-30 மணிக்கு மீண்டும் கழக நிர்வாகிகள் கூட்டம் ஆரம்பிக்கப்பட்டு, கழக ஆக்க வேலைகள் பற்றியும் தி மு. கழகத் தேர்தல் நிதி அளிப்பு பற்றியும் முடிவு செய்யப்பட்டது. இரவு 10 மணிக்கு, தோழர் டி. கே. சீனிவாசன், கழகம் தேர்தலில் கலந்து கொள்ளும் நிலையை விளக்கிப் பேசினார்.

11—11—56 காலை 9½ மணிக்கு காந்தி கதர் ஸ்டோர் மேல் மாடியில், ஆ. தி. மு. கழகப் பொது உறுப்பினர் கூட்டம் தோழர் இரா. தணிகாசலம் தலைமையில் நடைபெற்றது.

தோழர் டி. கே. சீனிவாசன் அவர்கள் தி. மு. கழகம் தேர்தலில் ஈடுபடுவது குறித்து விளக்கம் தந்தார். பின்னர், தி. மு. கழகத் தேர்தல் நிதியாக ரூ. 1000-க்குக் குறையாமல் அனுப்பித் தருவதென தீர்மானிக்கப்பட்டது.

அன்று மாலை 5-30 மணிக்கு, திரு. வி. க. திடலில் கே. வி. கே. சாமி அரங்கில், ஆமதாபாத் தி மு கழக ஆறும் ஆண்டு நிறைவு விழா நடைபெற்றது. தோழர் ஆர். பி. சுந்தரம் விழாவைத் துவக்கி வைத்தார். தோழர் இரா. நடராசன் வரவேற்புரையாற்றினர். கூட்டத்திற்குத் தோழர் இரா. தணிகாசலம் தலைமை வகித்தார். தோழர் ச. சந்திரன் தி. மு கழகக் கொடி ஏற்றுவித்தார். பின்னர், தோழர் டி. கே. சீனிவாசன் அவர்கள் அரியதோர் உரை நிகழ்த்தினர்.

பின்னர், முத்தமிழ் நாடக மன்றத்தாரின் வில்லுப் பாட்டும் 'விதவை' நாடகமும் நடைபெற்றது.

இறுதியில், முக்கியத் தீர்மானங்கள் பல நிறைவேற்றப்பட்டன.

## அணைக்கரை தி. மு. க. துவக்க விழா

### பொதுச்செயலாளர் இரா. நெடுஞ்செழியன் கலந்துகொண்டார்

கடந்த 19-ந் தேதியன்று மாலை, அணைக்கரை தி. மு. கழகத் துவக்க விழாப் பொதுக்கூட்டம் தோழர் தென்னவன் தலைமையில் நடைபெற்றது.

தோழர்கள் பொ. தருமன், ம. கோ. மணி ஆகியோர் சிறிது நேரம் பேசியபின், பொதுச்செயலாளர் இரா. நெடுஞ்செழியன் அவர்கள், காங்கிரஸ் சர்க்காரின் ஆட்சியின்கீழ் தென்னக மக்களுக்கு எந்தவிதத்திலும் நன்மை இல்லை என்பதை எடுத்துக்காட்டியும், எனவே தென்னகம் வளம் பெற்று வாழ, திராவிட மக்கள் அனைவரும் விழிப்புற்றெழுந்து திராவிட நாட்டைப் பெறப் பாடுபட வேண்டுமென்று கேட்டுக் கொண்டும், தி. மு. கழகம் தேர்தலில் ஈடுபட இருப்பதின் நோக்கத்தை விளக்கியும் சொற்பொழிவாற்றினார்.

அன்று முழுவதும் இடைவிடாது மழை பெய்தும்கூட, அம்மழையையும் பொருட்படுத்தாது ஏராளமான மக்கள் கூட்டத்தில் திரண்டிருந்து, பொதுச்செயலாளர் அவர்களுடைய கருத்துரைகளைக் கேட்ட நிகழ்ச்சி பாராட்டத்தக்கதாக இருந்தது.

தலைவர் முடிவுரையுடன் நன்றி கூறக் கூட்டம் இனிது முடிவுற்றது. (ந. கி.)

## ஏழை மாணவருக்கு

### இலவச உணவு விடுதி திறப்பு

அருப்புக்கோட்டை தாலுகாவைச் சேர்ந்த இராமநாய்க்கன்பட்டி நாடார் உறவின்முறை க்ஷத்திரிய உயர்தரத் துவக்கப் பள்ளியில் நவ. 20-ந் தேதியன்று திரு. வி. வி. இராமசாமி எம்.எல்.சி. அவர்கள் தலைமையில் ஏழை மாணவர்களுக்கு இலவச நண்பகல் உணவு விநியோகம் ஆரம்பிக்கப்பட்டது.

இந்த ஆரம்ப விழாவை, சென்னை மாநில கல்வி இலாகா டைரக்டர் திரு. என். டி. சுந்தரவடிவேலு நடத்திவைத்தார்.

இவ்விழாவில் மதுரை டிவிஷனல் இன்ஸ்பெக்டர் ஜனாப் எம். முகமது கனி, இராமநாதபுரம் மாவட்டக் கல்வி அதிகாரி பி. எஸ். எபனேசர், மதுரை ஆதாரக் கல்வி அதிகாரி ருத்ரப்பா, கல்லுப்பட்டி பயிற்சிப்பள்ளி தலைமை ஆசிரியர் கந்தசாமி, அருப்புக்கோட்டை கல்வி அதிகாரி எஸ். இராமசுப்பு, இராமநாதபுரம் மாவட்டக் கழகத் தலைவர் எஸ். ஆர். நாயுடு, மற்றும் பல பிரமுகர்களும் கலந்துகொண்டனர்.

மேற்படி பள்ளி நிர்வாகி திரு. எஸ். இராமநாத வெயிலுமுத்து அவர்கள், வருகை தந்த அனைவருக்கும் நன்றி கூறிக்கொண்டு, மாநில கல்வி இலாகா டைரக்டருக்கு வாழ்த்துப் பத்திரமும் வாசித்தளித்தார்.

திரு. என். டி. சுந்தரவடிவேலு அவர்கள் ஏழை மாணவர்களுக்கு உணவு வழங்கினர். (ந. கி)

## சேலத்தில் தோழர் கண்ணதாசன்

### பல நிகழ்ச்சிகளில் பங்கேற்றார்

4—11—56 காலை 10 மணிக்கு சேலம் 6-வது வட்டம் தி. மு கழகத் துவக்கவிழா, அங்காளம்மன் கோவில் தெருவில் தோழர் வி. கே. வரதராசுலு எம். சி. தலைமையில் நடைபெற்றது.

தோழர் வி சிவப்பிரகாசம் கழகக் கொடியேற்றிவைத்தார்.

தோழர் சிற்றனி-சுப்பிரமணியம் சிறிது நேரம் பேசினார்.

பின்னர், தோழர் கண்ணதாசன் அவர்கள் கழகக் கட்டிடத்தைத் திறந்துவைத்துப் பேசினார்.

#### நகரக் கழக அலுவலகத் திறப்பு

அன்று மாலை 4½ மணிக்கு சென்டிரல் டாக்கீசுக்கு எதிரிலுள்ள நகரக் கழக அலுவலகக் கட்டிடத்தை, தோழர் பி. இராமலிங்கம் தலைமையில் தோழர் கண்ணதாசன் திறந்துவைத்தார்.

அந்த வாடகைக் கட்டிடத்தை விரைவில் கழகத்திற்குச் சொந்தமானதாக்க கழகத் தோழர்கள் முயற்சி செய்யவேண்டுமென்று கேட்டுக்கொண்டு, தாமும் ரூ 201 நன்கொடை தருவதாகக் கூறினர்.

தோழர் கண்ணதாசன் தந்த நன்கொடையைப் பெற்றுக்கொண்டு தலைவர் நன்றி தெரிவித்துக்கொண்டார்.

மாலை 6½ மணிக்கு அம்மாப்பேட்டை (23-வது வட்டம்) கழகச் சார்பில் தோழர் கே. எம். கிருஷ்ணன் தலைமையில் நடைபெற்ற பொதுக்கூட்டதில் தோழர்கள் இ. ஆர். கிருஷ்ணன், சுப்பிரமணியம், வி. சிவப்பிரகாசம், எஸ் பி. சின்னையன் ஆகியோர் பேசியபின் தோழர் கண்ணதாசன் பொதுத் தேர்தல் குறித்தும், தமிழப் பிரச்சினைகள் குறித்தும் சொற்பொழிவாற்றினர். கூட்டத்தில் ஆயிரக்கணக்கான மக்கள் திரண்டிருந்தனர் (ந-கி.)

## தமிழ் இளைஞர் முன்னேற்ற மன்றப் பொதுக்கூட்டம்

### கல்யாணசுந்தரம், கண்ணதாசன் கலந்துகொண்டனர்

25—11—56 மாலை 6 மணியளவில், சென்னை — வேளாளத் தேனாம்பேட்டை தமிழ் இளைஞர் முன்னேற்றக் கழகச் சார்பில் ஒரு பொதுக்கூட்டம், போலீஸ் நிலையத்திற்கு எதிரில் நடைபெற்றது.

கூட்டத்திற்குத் தோழர் இராம வெள்ளையன் தலைமை வகித்தார்

தோழர்கள் கை. பிரமையா, ஏ. டேனியல் ஆகியோர் சிறிது நேரம் பேசியபின், தோழர் கண்ணதாசன் அவர்கள் தி மு கழகம் தேர்தலில் ஈடுபடுவது குறித்தும் முன்பு இல்லாத அளவில் இப்போது கழகத்திற்கு எழுந்துவரும் எதிர்ப்புகள் குறித்தும், பொதுத் தேர்தலில் மக்கள் திராவிட முன்னேற்றக் கழகத்தை ஆதரிக்கக் கேட்டுக்கொண்டும், தேர்தலுக்கான பணிகளில் கழகத் தோழர்கள் ஈடுபடுமாறு கேட்டுக்கொண்டும் சொற்பொழிவாற்றினர்.

அடுத்துத் தோழர் காஞ்சி-கல்யாணசுந்தரம் அவர்கள், ஹங்கேரி, போலந்து நாட்டு நிலைகளை விளக்கியும், இந்த நாட்டுக் கம்யூனிஸ்டுகளின் கொள்கைக் குழப்பத்தை சுட்டிக்காட்டியும், பொதுத் தேர்தலில் கழகத்திற்கு மக்கள் ஆதரவு தரவேண்டுமென்று கேட்டுக்கொண்டும் சொற்பொழிவாற்றினர்.

தோழர் இராம வெள்ளையன் தலைமையுரைக்குப் பின் தோழர் டேனியல் நன்றிகூறக் கூட்டம் இனிது முடிவுற்றது. (ந. கி.)

## கள்ளக்குறிச்சி வட்டத்தில் இரெ. இளம்வழுதி

### சுற்றுப் பயண விவரம்

★

சோமண்டார்குடி :

11—11—56 காலை 10-மணிக்கு தி. மு கழகத் துவக்கவிழா தோழர் இளையான் தலைமையில் நடைபெற்றது.

தோழர் தமிழரசன், தி. மு. கழகக் கொடியை ஏற்றுவித்தார்.

பின்னர் தோழர் இரெ. இளம்வழுதி அவர்கள், 'வடநாடும் தென்னாடும்' என்பதைப் பற்றியும், வருகிற பொதுத்தேர்தலில் தி. மு. கழகம் ஏன் தேர்தலில் போட்டியிடுகிறது என்பதைப் பற்றியும் விளக்கமாகப் பேசினார். தலைவர் நன்றி கூற கூட்டம் இனிது முடிந்தது. கூட்டத்தில் கழக நிர்வாகிகளும் தேர்ந்தெடுக்கப்பட்டனர். செயலாளர் : கங்காதரன்; துணைச் செயலாளர் : பூமலை; பொருளாளர் : இராமசாமி; மாவட்டப் பிரதிநிதி : கலிதீர்த்தான்; விளம்பர உறுப்பினர் : வெங்கடேசன்.

மோகூர் :

11—11—56 மாலை 2-மணிக்கு தோழர் க. காசியப்பன் தலைமையில் தி. மு. கழகத் துவக்கவிழா நடைபெற்றது. தோழர் ஜே. எச். பகதூர் தி. மு. கழகக் கொடியை ஏற்றி வைத்தார். தோழர் இரெ. இளம்வழுதி அவர்கள் கழகக் கொள்கைகளை விளக்கியும் வருகிற பொதுத்தேர்தலில் தி. மு. கழகம் வெற்றியடைய அனைவரும் ஒத்துழைக்குமாறும் கேட்டுக் கொண்டார். தலைவர் நன்றிகூற கூட்டம் இனிது முடிந்தது.

அக்கூட்டத்தில் கிளைக் கழக நிர்வாகிகளும் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். செயலாளர் : மு. இராமசாமி; துணைச்செயலாளர் : செ. முத்தன்; பொருளாளர் : கா. முத்தன், மாவட்டப் பிரதிநிதி: மா. இராசு.

கள்ளக்குறிச்சி :

11—11—56 மாலை 6-மணிக்கு கள்ளக்குறிச்சி தி. மு. கழகப் பொதுக்கூட்டம் தோழர் ஜே. எச். பகதூர் தலைமையில் நடைபெற்றது. தோழர்கள் அம்பாயிரம், மு. பாண்டியன் ஆகியோர் பேசினபின் தோழர் இரெ. இளம்வழுதி அவர்கள், வடநாடு—தென்னாடு வேற்றுமைகளை விளக்கியும், காங்கிரஸ் சர்க்காரின் போக்கைக் கண்டித்தும் சொற்பொழிவாற்றினர். தலைவர் நன்றி கூறக் கூட்டம் இனிது முடிவுற்றது. (ந. கி.)

## வியப்பும் அதிர்ச்சியும் தந்துள்ளதாம்

புதச்சேரி, நவ. 24—

டிசம்பர் முதல் தேதிமுதல் வேலை நிறுத்தம் செய்வதென துறைமுகத் தொழிலாளர்கள் முடிவு செய்துள்ளது வியப்பையும் அதிர்ச்சியையும் தந்துள்ளதாக இரயில்வே அமைச்சர் சாஸ்திரி கூறியுள்ளார்.

தொழிலாளர்களின் குறைகளைக் கவனிக்க ஒரு அதிகாரியை நியமித்துள்ளனராம். மேலும் அந்தப் பகுதியில் குழுவை நிறுவ அரசாங்கம் தயாராக உள்ளதாம்.

### ஏழை குடும்பங்களுக்கு நஷ்ட ஈடு தரப்படுமாம்

புதச்சேரி, நவ. 24—

புதுவையில் புதிய கப்பல் துறை கட்டுவதற்கு எடுத்துக்கொள்ளப்படும் நிலத்திலிருந்து வெளியேறும் ஏழைக் குடும்பங்களுக்கு இந்திய அரசாங்கம் போதுமான நஷ்டஈடு தரும் என்று இரயில்வே அமைச்சர் வாக்களித்துள்ளார்.

## 1,000 இடங்களில் போட்டியிடுமாம்!

இலட்சுமணபுரி, நவ. 25—

மக்கள் சபைக்கு 100 இடங்களிலும் சட்டசபைகளுக்கு 1,000 இடங்களிலும் 'ஜன சங்கம்' போட்டியிடும் என்று அக்கட்சியின் பொதுச் செயலாளர் அறிவித்துள்ளார்.

### கோடம்பாக்கத்திற்குக் குழாய்த் தண்ணீர்

சென்னை, நவ. 25—

கோடம்பாக்கத்திற்குக் குழாய்த் தண்ணீர் விநியோகம் செய்யவும் சாக்கடை வசதி அளிக்கவும், நகரசபை அக்கரை செலுத்தி வருவதாகக் கமிஷனர் குறிப்பிட்டுள்ளார்.

### சென்னை 47-வதுவட்ட தி.மு.க. பொது உறுப்பினர்கட்கு:

29—11—56 மாலை 7 மணியளவில், அசைத சடைத்தெரு, எண் 95, இல்லத்தில், 47-வது வட்டக் கழகப் பொதுஉறுப்பினர் கூட்டம் நடைபெறும்.

### சென்னை 2-வது வட்ட தி.மு.க. பொது உறுப்பினர்கட்கு:

29-11-56 மாலை 6½ மணிக்கு, சென்னை 2-வது வட்ட தி. மு. கழகப் பொது உறுப்பினர் கூட்டம் கழகப் பணிமனையில் (எண் 100, மன்னார்சாமி கோயில்தெரு) நடைபெறும்.

### சொற்பயிற்சிக் கூட்டங்கள்

29—11—56 மாலை 6½ மணிக்கு சென்னை—தண்டையார்பேட்டை ஒய். எம். சி. ஏ. மன்றத்தில் தோழர் என். சிவரத்தினம் முன்னிலையிலும் தோழர் டி. பி. சுந்தரம் தலைமையிலும் 'தற்கால அரசியல் நிலை' எனும் தலைப்பில் தோழர்கள் பலர் பேசுவர்.

* * *

28—11—56 மாலை 7 மணிக்கு சென்னை—சூளை வை. பு. அ. சவுந்திரபாண்டியனார் நினைவுப் படிப்பகத்தில் தோழர் கோதண்டன் தலைமையில், 'இலக்கிய இன்பம்' எனும் தலைப்பில் தோழர்கள் பலர் பேசுவர்.

### விருதுநகரில் கடும் மழை

கழகக் கூட்டம் ஒத்திவைப்பு

விருதுநகர், நவ 26—

விருதுநகரைச் சுற்றியுள்ள பகுதிகளிலெல்லாம் இன்னும் அடைமழை பெய்துகொண்டே இருக்கிறது. மழையின் காரணமாக இங்குள்ள கல்லூரிகள், பள்ளிகளெல்லாம் மூடப்பட்டு விடுமுறை அளிக்கப்பட்டுள்ளது. நேற்று நடைபெற இருந்த கழகப் பொதுக் கூட்டமும் ஒத்திவைக்கப்பட்டுள்ளது. (ந கி.)

### தோழர் கி. மனோகரன்

கடந்த 4-ந்தேதிமுதல் 20-ந்தேதி வரை, இலங்கையில் நடைபெற்ற திருக்குறள் மாநாடு, கழகக் கூட்டங்கள், பொது நிகழ்ச்சிகள், கல்லூரி அவைகள் ஆகியவைகளில் பங்கெடுத்துக்கொண்டு, தோழர் கி. மனோகரன் அவர்கள் 21-11-56-ல் சென்னைவந்து 23-11-56ல் நாகர்கோவிலுக்குப் புறப்பட்டுச் சென்றார்.

# இரயில்வே மந்திரி இராஜிநாமா

## பண்டித நேரு விளக்கம்

அரியலூர் விபத்து காரணமாக இரயில்வே மந்திரி லால்பகதூர் சாஸ்திரி தனது பதவியை இராஜிநாமா செய்துள்ளார் என்றும், அதை அங்கீகரிக்குமாறு, குடியரசுத் தலைவருக்குத் தான் சிபாரிசு செய்துள்ளதாகவும் பண்டித நேரு கூறியிருக்கிறார்.

"இந்த விபத்து பற்றி ஆயிரம் சமாதானங்கள் கூறலாம்; விளக்கங்கள் தரலாம்; ஆனாலும், இதுபோன்ற ஒரு விவகாரத்தில், எந்த ஒரு சமாதானமும் போதுமானதல்ல; ஒரே வகையான விபத்து ஏறத்தாழ ஒரே பிராந்தியத்தில் தொடர்ந்து இரண்டு மூன்று முறைகள், குறுகிய காலத்திற்குள் நடந்திருப்பதுதான் நமக்கு மிகுந்த கவலையைத் தருகின்றது.

"நாம் எல்லோரும் மிகுந்த கவலை கொண்டாலும், மிக அதிர்ச்சி அடைந்திருப்பவர், இரயில்வே மந்திரி சாஸ்திரி.

"இந்த அரியலூர் விபத்திற்கு, அவர் தனிப்பட்ட முறையில் பொறுப்பாளி என்பதனால் அல்ல, அவரது இராஜிநாமாவை நான் அங்கீகரிப்பது; ஆனால், அரச ஒழுக்கப்படி அவர் பதவியிலிருந்து விலகுவது சரியே என்று கருதுகிறேன்; இந்த விஷயத்தில் நாம் ஒரு முன்மாதிரியாக விளங்கவேண்டும்.

"என்ன நிகழ்ந்தாலும் நாம் அது பற்றிக் கவலைப்படாமல் நிர்வாகத்தைத் தொடர்ந்து நடத்திக் கொண்டிருப்போம் என்று எவரும் கருதிவிடக் கூடாது"

என்றும் பண்டித நேரு கூறியிருக்கிறார்.

### யார் பொறுப்பாளி?

"விபத்திற்கு, மந்திரி பொறுப்பல்ல; யார்தான் இதற்குப் பொறுப்பு என்பதும் எனக்குத் தெரியாது.

"எஞ்சினீயர்கள்தான் இதற்குப் பொறுப்பாளியாயிருந்து, இதுபோன்ற விபத்துக்கள் நிகழாவண்ணம் பார்த்துக்கொள்ளவேண்டும்.

"அவர் பொறுப்பாளியானாலும், இதுபோன்ற விபத்துக்கள் பற்றிய பூரண விசாரணை நடத்தியாகவேண்டும்,"

என்றும் பண்டிதர் கூறியிருப்பதாகத் தெரியவருகிறது.

### உறுப்பினர் வருத்தம்

காங்கிரசாராலும் மற்றவர்களாலும் பெருமளவு மதிக்கப்படும் சாஸ்திரி பதவியிலிருந்து விலகுவது கண்டு பல மக்கள் சபை உறுப்பினர்கள் வருத்தம் தெரிவித்திருக்கின்றனராம்.

'மந்திரிகள் கொள்கைகளை வகுப்பதில்தான் பொறுப்புடையவர்கள். மந்திரியின் கொள்கை, நாட்டிற்கு அழிவு தேடித் தந்திருந்தால் மந்திரி இராஜிநாமாச் செய்யலாம். அரியலூர் விபத்து, கொள்கை சம்பந்தப்பட்டதல்ல; எனவே, அவர் பதவியிலிருந்து விலகத் தேவையே இல்லை" என்று சில உறுப்பினர்கள் கருதுகின்றனராம்.

### கூடாது

'சாஸ்திரியின் இராஜிநாமாவை அங்கீகரிக்கக்கூடாது.' என்று சில உறுப்பினர்கள், கையெழுத்துப் போட்டு பண்டிதருக்கு 'மகஜர்' அனுப்பியுள்ளனராம்.

*



# அரியலூர் விபத்து பற்றி நீதிபூர்வ விசாரணை

## கல்கத்தா உயர் நீதிமன்ற நீதிபதி நியமனம்

அரியலூர் இரயில் விபத்து பற்றி நீதிபூர்வ விசாரணை நடத்துவதற்காக, கல்கத்தா உயர் நீதிமன்றத்தைச் சேர்ந்த நீதிபதி எச். கே. பாசு அவர்களை டில்லி சர்க்கார் நியமித்து உத்தரவு பிறப்பித்துள்ளனர் என்று தெரியவருகிறது.

செலவைப் பொருட்படுத்தாமல் முழு விசாரணை நடத்தப்படும் என்றும், இதுபோன்ற விபத்துக்கள் தொடர்ந்து நடைபெறாமல் தடுக்கப்படும் என்றும் பண்டித நேரு மக்கள் சபையில் தெரிவித்திருக்கிறார்.

விசாரணை, டிசம்பர் முதல் தேதி துவங்கும் என்றும், நீதிபதிக்கு உதவியாக இரு தொழில நுட்ப மறிந்த நிபுணர்கள் இருப்பர் என்றும் தெரிவிக்கப்பட்டுள்ளது.

### வேதனையிலும் விசித்திரம்!

திருச்சி, நவ. 26—

அரியலூரில் இரயில் விபத்து நடந்த இடத்திற்கு அருகாமையில் உள்ள கிராமங்களைச் சோதனையிட்டு போலீசார் சுமார் ரூ. 10,000 பெறுமானமுள்ள சொத்துக்களையும் ரொக்கப் பணத்தையும் கைப்பற்றினா; இவை, விபத்தில் பாதிக்கப்பட்டவர்களின் சொத்து என்று கூறப்பட்டுள்ளது.

### ஏரிகள் நிரம்பின!

சென்னை, நவ. 26—

புழலேரி, சோழவரம் ஏரி, பூண்டி நீர்த் தேக்கம் ஆகியன நிரம்பிவிட்டனவாம்.

புழலேரியில் முழு மட்டத்திற்கு தண்ணீர் நிரம்பியுள்ளது.

சோழவரம் ஏரி நிரம்பி வழிகிறது. பூண்டி நீர்த் தேக்கமும் நிரம்பிவிட்டது.

### இலங்கைக்குப் புதிய ஹைகமிஷனர் நியமனம்

புதுடில்லி, நவ. 26—

அடுத்த மார்ச் திங்களில், தற்போது பிரிட்டனில் உதவி இந்திய ஹைகமிஷனராக உள்ள ஒய். டி. குண்டேவியா, இலங்கைக்கு ஹைகமிஷனராக நியமிக்கப்பட்டுள்ளார்.

★

# 'மேலும் ஆபத்தான விபத்துக்கள் எதிர்நோக்கியுள்ளன'

## தென்னாட்டு இரயில் பாலங்கள் பற்றி வல்லத்தரசு எச்சரிக்கை

"இதர பாலங்கள் பழுதுபார்க்கப்படும்வரையில், தென்னாட்டில் ஒரு வாரத்திற்கு இரயில் ஓடாவிட்டாலும் நல்லது.

"குறிப்பாக மூன்று பாலங்கள் பற்றி நான் மிகவும் பயப்படுகிறேன்—காவேரிப் பாலம், நாகப்பட்டினம் — மாயவரத்திற்கிடையில் உள்ள ஒரு பாலம், கொட்முருட்டிப் பாலம் ஆகியவை பழுது பார்க்கப்பட வேண்டும்.

"இந்தப் பாலங்களை அடுத்து மண், பெருமழையினால் அரிக்கப்பட்டு, பாலங்கள் பாதுகாப்பற்று இருக்கின்றன; இவை பற்றி உடனடியாகக் கவனிக்காவிட்டால், நம்மைப் பெரும் ஆபத்தான விபத்துக்கள் எதிர்நோக்கியிருக்கின்றன என்றுதான் கூற வேண்டும்,"

என்று தோழர் வல்லத்தரசு மக்கள் சபையில் குறிப்பிட்டிருக்கிறார்.

அவர் 'அரியலூர் விபத்து பற்றி மக்கள் சபை விவாதிக்கவேண்டும்,' என்று கொண்டுவந்த ஒத்திவைப்புப் பிரரேபணை நிராகரிக்கப்பட்டது.

பெருக்கெடுத்த கண்ணீருக்கிடையே அவர், 'எனது உறவினர்கள் பலர் விபத்தில் பலியாகிவிட்டனர்; 141 பேர் இறந்துபட்டதாக சர்க்கார் கூறியுள்ளது. இன்னும் 200 பேர் வரை இறந்திருக்கக் கூடுமென பத்திரிகைகள் மதிப்பிட்டுள்ளன. இந்த நிலையில் இது பற்றி மக்கள் சபையும் சர்க்காரும் கவனம் செலுத்துவது, தென்னாட்டு மக்களுக்கு சற்று ஆறுதல் தருவதாகும்,' என்றும் வல்லத்தரசு குறிப்பிட்டிருக்கிறார்.

முழு விபரங்கள் கிடைத்ததும் சபை அதுபற்றி விவாதிக்கலாம் என்று தலைவர் கூறியுள்ளாராம்.

### ஒரு கோடி டாலர் ஒதுக்க வேண்டுமாம்

நியூயார்க், நவ 26—

ஐ. நா. படைகளுக்கு ஏற்படும் செலவுகளுக்காக ஒரு கோடி டாலர் ஒதுக்கவேண்டுமென்று ஐ. நா. செயலாளர், ஐ. நா. பொதுச் சபையில் கேட்டுள்ளார் எனத் தெரிகிறது.

# டால்மியாமீது குற்றப் பத்திரிகை தாக்கல்

## ரூ. 2,85,80,704 மோசடி செய்ததாக வழக்கு

புதுடில்லி, நவ 26—

பாரத் இன்ஷ்யூரன்ஸ் கம்பெனிக்கு சொந்தமான 2,85,80,704 ரூபாயை மோசடி செய்வதற்கான சதியில் ஈடுபட்டதாக, சேத் இராமகிருஷ்ண டால்மியா, மற்றும் எட்டு பேர்மீது, டில்லி மாவட்ட நீதிமன்றத்தில் வழக்கு ஒன்று பதிவு செய்யப்பட்டிருக்கிறது என்று தெரியவருகிறது.

இந்தச் சதி 1953 செப்டம்பரில் உருவானதாகவும், குற்றஞ்சாட்டப்பட்டுள்ள ஒன்பது பேரும் மேற்படி தொகையை 33 தவணைகளில் செக் மூலம் பாங்கியிலிருந்து பெற்றதாகவும் சர்க்காரின் விசேட போலீஸ் நிறுவனத்திற்கான தனி பிராசிகியூடர் குற்றச்சாட்டில் கூறியிருக்கிறார்.

### மாநிலந்தோறும் அபிவிருத்திக் குழுக்களாம்!

புதுடில்லி, நவ. 26—

நிபுணர்கள், தொழிலதிபர்கள், அதிகாரிகள் ஆகியோரடங்கிய அபிவிருத்திக் கவுன்சில் ஒன்று ஒவ்வொரு மாநிலத்திலும் அமையும் என்றும், இந்தக் கவுன்சில் ஒவ்வொரு மாவட்டம், வட்டம் இவற்றின் தொழில் வாய்ப்புகளைக் கண்டறியும் என்றும் கனரகத் தொழில் மந்திரி எம். எம். ஷா இன்று மாநிலங்கள் சபையில் பேசும்போது குறிப்பிட்டிருக்கிறாராம்.

# துறைமுகத் தொழிலாளர் உத்தேச வேலைநிறுத்தம்

## தவிர்ப்பதற்கு சர்க்காரின் கடைசி நிமிட முயற்சி

பம்பாய், நவ. 26—

வரும் டிசம்பர் முதல் தேதி முதல், துறைமுகத் தொழிலாளர்கள் இந்தியாவெங்கணும் வேலை நிறுத்தத்தில் ஈடுபடப்போவதாக அறிவித்துள்ளனரல்லவா?

இந்த வேலை நிறுத்தத்தைத் தவிர்ப்பதற்காக, கடைசி நிமிட முயற்சி ஒன்றை டில்லி சர்க்காரே மேற்கொள்ளப்போகிறதாம்.

துறைமுகத் தொழிலாளர் சங்கப் பிரதிநிதிகளை டில்லி வருமாறு சர்க்கார் அழைத்திருக்கிறதாம், பேச்சுவார்த்தை நடத்துவதற்காக!

பேச்சுவார்த்தைகள் முறிந்துவிட்டால், வேலைநிறுத்தத்தை முறியடிக்கவும் சர்க்கார் நடவடிக்கைகள் மேற்கொள்ளுமாம்.

திராவிட முன்னேற்றக் கழகத்துக்காக தோழர் இரா. நெடுஞ்செழியன், எம்.ஏ. அவர்களால் அழகிரி அச்சகத்தில் அச்சிடப்பெற்று, (24, சூரியநாராயண செட்டித் தெரு, இராயபுரம் சென்னை) வெளியிடப் பெறு கிறது. ஆசிரியர்: இரா. நெடுஞ்செழியன் எம். ஏ.

